திருவாளர், திருநெல்வேலி

# தொண்டைமான் முத்தையா

அவர்களின் நினைவு மலர்

1965



KMM 0420

அவர்கள் குமாரன்,

T. M. பாஸ்கரத் தொண்டைமான், B. A.

பதிப்பித்தது



தொண்டைமான் S. B. முத்தையா

— திருநெல்வேலி —

[ 1879 — 1936 ]

# பொருளடக்கம்

---

# மதிப்புரை

---

பிர்மஸ்ரீ மகாமகோபாத்யாய தாக்ஷிணாத்ய கலாநிதி

டாக்டர்

## உ. வே. சாமிநாதையர் அவர்கள்

---

ஸ்ரீமான் தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள், தம்முடைய தந்தையாராகிய ஸ்ரீ தொண்டைமான் முத்தையா அவர்களுடைய நினைவு மலராக வெளியிட்டுள்ள புத்தகத்தில் சில பகுதிகளைப் படித்துப் பார்த்தேன். முத்தையா அவர்கள் ஓவியவல்லுநராக இருந்தனரென்பதை அவர் நண்பர்களும் பிறரும் நன்கறிவர். இந்த மலரினால் அவர் காவியத்திலும் வல்லுநரென்பது தெரியவரும். ஸ்ரீமான் பாஸ்கரத் தொண்டைமானவர்கள் தம் தந்தையாரியற்றிய ஆங்கிலப் பாக்கள் சிலவற்றையும், தமிழ்ச் செய்யுட்களில் சிலவற்றையும், கட்டுரைகள் சிலவற்றையும் தொகுத்து இதில் வெளியிட்டிருக்கின்றனர். முத்தையா அவர்களுடைய உடலைக் காணமுடியாவிடினும் அவரது உள்ளத்தை இம்மலர் ஒருவாறு காணும்படி செய்கின்றது. இதிலுள்ள தமிழ்ப் பகுதியால் முத்தையா அவர்களது உள்ள நெகிழ்ச்சியும், தெய்வ பக்தியும், நம் நாட்டிற் சித்திரக்கலை உயர்வடைய வேண்டுமென்று அவருக்கிருந்த ஆர்வமும் தமிழன்பும் வெளிப்படுகின்றன.

தியாகராஜ விலாசம்,
திருவேட்டீசுரன்பேட்டை,
சென்னை.
24—8—37.

இங்ஙனம்,
வே. சாமிநாதையர்.

# முன்னுரை

---

என் தந்தையார், தோண்டைமான் முத்தையா அவர்கள், சென்ற 1936-ம் வருடம், ஜுன் மாதம், 26-ம் தெய்தி இறைவன் திருவடி நீழல் அடைந்தார்கள். அவர்கள் தம் வாழ்நாளில் எழுதியும, பேசியும் உள்ள விஷயங்களைத் தொகுத்து அவர்களது ஞாபகார்த்தமாக, ஒரு சிறு புத்தகம் வெளியிடுவதே, அவர்களது வருஷாப்தீக தினத்தை நல்லதொரு முறையில் கொண்டாடுவதாகும் என்று நினைத்து இந் நினைவு மலரைப் பதிப்பித்தேன்.

அவர்கள் எழுதியுள்ள பாக்களும், வசனங்களும் பல வுளவேனும், விரிவஞ்சி அவற்றுள் சில பகுதிகளே இந் நினைவு மலரில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இவை என் தந்தையாரது சமயக் கொள்கை, உலகிய லறிவு, இலக்கியச் சுவை முதலியவற்றை எடுத்துக் காட்டும் தன்மையன.

எனது வேண்டுகோளுக்கிணங்கி, தமிழ் முகவுரை அளித்த திரு. ராவ்சாஹெப் V. P. சுப்பிரமணிய முதலியார் அவர்களுக்கும், ஆங்கிலத்தில் தத்தம் நினைவுகளை எழுதி உதவிய நண்பர் திரு. T. B. கிருஷ்ணசாமி முதலியார் அவர்களுக்கும், பிரின்சிபால் திரு. அலெக்சாண்டர் ஞானமுத்து அவர்களுக்கும் நன்றிசெலுத்தும் கடப்பாடு மிக்குடையேன். இந் நினைவுமலர் வெளியிடும்படி ஊக்கியும், பதிப்பித்தலில் புரூபுகள் திருத்தியும் உதவிய நண்பர் திரு. வித்வான், P. K. அருணசலக் கவுண்டர் அவர்களுக்கும், திரு. M. R. M. சுந்தரம் அவர்களுக்கும் என் நன்றி உரியதாகும். இந் நினைவுமலரை விரைவாகவும், அழகாகவும் அச்சியற்றிக்கொடுத்த என் நண்பரான ஹிலால் பிரஸ் அதிபர் அவர்களுக்கு என் மனமார்ந்த வந்தனம் உரியதாகும்.

சித்திராலயம்,
திருநெல்வேலி.
14–7–'37

தோ. மு. பாஸ்கரன்.

# முகவுரை

---

திருவாளர் T. B. முத்தையாத் தோண்டைமான் அவர்களை, அவர்கள் இறைவனடி சேர்தற்குமுன் இருபது வருட காலமாக அறிந்திருக்கின்றேன். அவர்களுடன், நான் அளவளாவ நேர்ந்த அமையங்களில், அவர்களது சிறந்த இயற்கையறிவையும், பரந்த கல்வி கேள்வி யறிவையும் தெரிந்து மகிழ்ந்திருக்கின்றேன்.

அவர்கள் தமிழ்க் கவி நயமறிந்த ஒரு நல்ல குடும்பத்தில் பிறந்தவர்கள். இளமையிலேயே ஆங்கில நூல்கள், தமிழ் நூல்கள் பயிலுவதிலும், கவிகளியற்றுவதிலும் ஊக்கம் காட்டினவர்கள். அவர்களது செய்யுள் நடை, தட்டுத் தடையில்லாது செல்லும் ஆற்றொழுக்குப் போன்றிருக்கின்றது. அநேகமாக, இராமலிங்க சுவாமிகளது அருட்பாக்களின் செம்பாகமான முறையைப்பின்பற்றி அவர்கள் பாடிய தமிழ்ப் பாட்டுக்களெல்லாம் இருக்கக் காண்கின்றோம். சமய ஆராய்ச்சித் துறையில் மிகவும் ஈடுபட்ட அவர்கள், அவ்வப்பொழுது தம் உள்ளத்தெழுந்த கருத்துக்களைக் கவி ரூபமாக அமைத்து வைத்திருக்கின்றார்கள். அவர்களை உலகம், ஒரு சித்திரிகர் அல்லது புகைப்படம் பிடிப்பவர் என்றுதான் அறியும். ஆனால், அவர்கள் எழுதியிருக்கும் கவிமலர்களாலும், வசனப் பூங்கொத்துக்களாலும், தமிழ்த் தாய்க்குத் தம்மாலியன்றதொரு தொண்டுபுரிந்திருக்கிறார்கள். எளிய நடையையே பெரிதும் போற்றும் இக்காலத்தில் அவர்களது கவிகள் கற்றோர்க்கு இனிய விருந்தாயிருக்குமென்றெண்ணுகிறேன்.

அவர்கள் குமாரர், எனது நண்பர், திருவாளர் T. M. பாஸ்கரத் தோண்டைமானவர்கள், B. A., தமது அருமைத் தந்தையார் இயற்றிய ஆங்கிலப் பாடல், தமிழ்ப் பாடல்களிலும், தமிழ்க் கட்டுரைகளிலும் சிலவற்றைத் தேர்ந்தெடுத்துப் பதிப்பித்து, அவைகளுக்கு முன்னுரையாக "என் தந்தையாரைப்பற்றிய நினைவுகள்" என்ற தலைப்பின்கீழ், அவர்கள் வரலாற்றை மிகவும் இயற்கையாகவும், இனிமையாகவும் எழுதியிருக்கின்றார்கள். இந்தப் பாடல்கள், கட்டுரைகளையும் வரலாற்றையும் படிப்பது, இனிமையாகப் பொழுது போக்குவதாக இருப்பதோடு, ஆழ்ந்த தெய்வ பக்தி, சர்வ சமய சமரச பாவனை, குல முன்னேற்றம், சனச் சாரச் சீர்திருத்தமென்ற நற்காரியங்களில் சிந்தனையைச் செலுத்தச்செய்யும் சிறந்த பயனுடையதாயுமிருக்குமென்று கருதுகின்றேன்.

வெள்ளகால் போஸ்டு,
திருநெல்வேலி ஜில்லா. } வே. ப. சுப்பிரமணிய முதலியார்.

---

# A REMINISCENCE
## AND
# APPRECIATION

BRAHMA MUTHIAH TONDAMAN, Photographic artist, artist in words and colours, and art instructor at the Hindu College, Tinnevelly, was one of those, who chose to slip through life unnoticed, doing all the good they could. Naturally the world at large knew little of him and only a few friends and art-disciples cherish the memory of his kindness and goodness. Were every man in the world to have a biography, the world of books would be choked up, even as a crowded churchyard, where men have much ado to pick their way because of tomb-stones. Yet, is each individual life sacred and fain would leave its little mark on the spot of earth it once inhabited.

I am not attempting a biography. That would require much closer association with the subject, than was possible in our very divergent courses of life and though I knew Mr. Tondaman for well over 25 years,—*mortalis aevi spatium grande*—I knew him very intimately for only five years, the period of my stay at Tinnevelly as a practising member of the Bar. Mr. Tondaman came into camp with me occasionally and otherwise, we contrived to meet very often in our daily walks and drives.

On these occasions, I had the benefit of the larger experience of the senior man, a timely warning against close association with such and such an undesirable person, a sympathetic discussion of social problems, a soul-stirring out-pour of thoughts and meditations. These, alas, set down in cold print like cut flowers lost the fragrance of fervent feeling and personal appeal, but recalled in the original setting had all the rapture of genuine inspiration.

There is much in the receptivity of the hearer or the reader, that makes for power of literature independent of the intrinsic value of the expression and the experience. Only the highest are independent of time, ecstasy and environment. To this order of literature neither Tondaman nor the present writer can claim to have contributed. Written to please oneself, to please a friend, by recording the impression of the moment, these writings are bound to be pathetically ephemeral, but for the consoling fact that the situations recur and men everywhere are frightfully similar in their views and feelings. The filial gratitude of Mr. Bhaskar has sought to preserve and perpetuate these random thoughts and the reader will find in the following pages some glimpses of Mr. Tondaman's mind, lightning-flashes that reveal the depths of his feelings. He was an earnest student of Tagore and all the poems in English — alas too few! — were written when the fresh discovered genius of our poet laureate shook

all Europe from side to side. Mr. Tondaman found vent for his pent-up feelings and beat his music out in English and Tamil, with the latter of which language he had more scholarly familiarity.

To be on the sands of the Tambraparani in view of the rippling rolling water, within reach of the soft cool and bracing breeze, sensitive, alike to the rustling of the dry leaves on the palm trees on the Melapalayam shore and the rumbling of the railway-train on the new-laid iron bridge, as to the shifting and scintillating colours of clouds and the sweet warble of birds as they settle down a minute close to the water on the sands, pouring out a melody or two and picking up a worm or so as a return therefor and then flying away in a swift darting arrow of light, this is to drench with the healing balm of nature, the sick brain and seared heart that the mad world serves only to sadden and stifle, to coarsen and imbrute.

Or again along Palayapettai road at Pambankulam, to sit on the bund on carriage cushions contemplating the ruin of the rich brahmin's oil mill and the poor non-brahmin cart-driver's extensive *nanja* fields worth a lakh of rupees, while the soft breeze blows and the stream of people flows along the road with the frequent hoot of the motor-horn as the bus whirls along its chattering human load and reflecting on human destiny, the ups and downs

and undiscerned pitfalls and accidental lifting up by fortune's wheels, is to hold ourselves forewarned to conduct ourselves in all humility, never elated, never dejected, but holding to God and Truth with equal grace in either fortune.

But enough, to make old memories roll out in endless prospect and to think of the companion whose experiences energised my own thought and enlivened my out-look. The genius for good companionship, a certain inbred goodness that made friends and retained them was after all has been said and done, the great virtue of Mr. Tondaman what the Greeks called *emphytos chrestotes* and this constitutes his claim to affectionate remembrance among those whose privilege it was, to know him.

PRINCIPAL,
C. D. COLLEGE,
ANANTAPUR.

T. B. KRISHNASWAMI.

---

MY REMINISCENCES

OF

## Mr. TONDAMAN MUTHIAH

---

Tondaman Muthiah, the very mention of the name brings to my mind the happiest of recollections and the pleasantest of memories. When I joined the Hindu College in 1928, he was introduced to me as the Senior Drawing Master of the High School. Our acquaintance soon ripened into friendship and we continued to be the best of friends till death snatched him away last year.

It was not as an artist that Mr. Tondaman Muthiah impressed me, though he was an excellent artist and though his painting in oils of Messrs. Winkler and Subramania Kavirayar (now adorning the walls of the English Lecture Hall) will bear eloquent testimony to his workmanship. What impressed me most in Tondaman Muthiah was his versatile genius. He was an excellent conversationalist; one could switch him on to any topic and listen with pleasure to his delightful talk. Philosophy was his pet theme and his prose poems will prove his philosophic turn of mind.

He was one of the most loyal and devoted workers of the College and he continued to take genuine interest in the institution which he diligently served for 30 years, till the last days of his life.

1965



An admirable teacher, a level headed thinker, a talented conversationalist, a friend of sterling worth —that's how Tondaman Muthiah will be described by all those who came in intimate contact with him. He could with penetrating genius and shrewdness 'look under the surface' and discover with ease the good and bad sparks of humanity. May his soul rest in peace.

Principal,
M. D. T. Hindu College,
Tinnevelly.

ALEXANDER GNANAMUTTU.

---

# என் தந்தையாரைப்பற்றிய நினைவுகள்

## தோண்டைமான்

சென்ற சில வருடங்களுக்கு முன்பு திருநெல்வேலியில் "Mr. தோண்டைமான்" என்னும் பெயர் என் தந்தை யாரையே குறிப்பதாகும்.

"தோண்டைமான்" என்னும் பதம், தொண்டை மண்டலத்தை யாண்ட தொண்டை மன்னர்களின் பட்டமா யிருந்து, பின்னர் அவர் வழி வந்த புதுக்கோட்டை அரசர் களின் பட்டமாயிருக்கிறது. புதுக்கோட்டை ராஜ்யம் இன் றும், "தொண்டைமான் புதுக்கோட்டை" என்றே வழங் கப்படுகிறது. அப் புதுக்கோட்டை அரசர்களிற் சிலர் க்ஷேத் திரவாசமாய்த் தென்னாடு வந்திருந்தபொழுது, இங்குத் தங்கள் கால்வழியினர் சிலரை நிறுத்தியிருந்தார்கள். அவர் கள் வழி வந்தவர்களே இன்று திருநெல்வேலியில் தொண் டைமான்களாக விளங்குகின்றார்கள்.* இத்தொண்டைமான்க ளிடையே, கல்வியறிவால் மேம்பட்டவர்கள் என் தந்தை யார். ஆகவே, அவர்கள் கல்வி கேள்விகளிற் சிறந்தவர்க ளிடையே பழக நேர்ந்தபோது, அவர்களின் நண்பர்கள் எல் லாரும் "Mr. தோண்டைமான்" என்றே அவர்களை அழைத் தார்கள். குலப் பெயரே அவர்கள் இயற் பெயராய் அமைந் தது. வள்ளுவக்குடிப் பிறந்தவரை வள்ளுவர் என்றும்,

* இதற்குச் சான்றாக மடாலயச் செப்புப்பட்டயம் ஒன்று உண்டு. தொண்டைமான் சரிதச் சுருக்கத்தை என் தந்தையார் புதுக்கோட்டை ரீஜெண்ட் சாகிப், ஸ்ரீலஸ்ரீ விஜய ரகுநாத துரைராஜர் பேரில் பாடியிருக்கும் மெய்க்கீர்த்தியில் காண்க.

சேக்கிழார் மரபில் வந்தவரைச் சேக்கிழார் என்றும் சொல்வது தமிழ் மரபுதானே.

## குடும்ப வாழ்க்கை

என் தந்தையாரது குடும்ப வாழ்க்கையில் குறிப்பிடத் தக்க விசேடமான நிகழ்ச்சிகள் யாதும் இல்லை. 22-4-1879-ல் திரு. சிதம்பரத் தோண்டைமான் அவர்கள் முதல் மகனாய்ப் பிறந்தார்கள். இளமையில் இவர்கள் குடும்பம் செழிப்புடையதாயினும், பிந்திய காலங்களில் தளர்வுடையதாயிற்று. ஆகவே, தமது நிலையைத் தாமுணர்ந்தவர்களாய், வாழ்க்கை முழுவதும் பணத்தின் அருமை தெரிந்து, செட்டாய்க் காலங்கழித்தார்கள். எங்கள் சமூகத்தில் முதன் முதல் ஆங்கிலக் கல்வி கற்றவர்கள் இவர்களே. தமது இருபத்தோராம் வயதில் ஆண்டிச்சியம்மாளைத் திருமணஞ் செய்து அவரோடு ஒரு வருடம் வாழ்ந்தபின், அம்மையார் இவ்வுலகை நீத்தார்கள். அவர்கள் மீது வைத்திருந்த ஆழ்ந்த அன்பும் காதலும், அவர்கள் தம் பிரிவால் எற்பட்ட பெருந் துயரும், என் தந்தையார் பாடியுள்ள இரங்கற் பாக்களில் வெளியாகும். இதன் பின்தான் என் தாயாரை இவர்கள் மணஞ்செய்தது. இவர்களுக்கு மக்கட் பாக்கியத்தில் யாதும் குறைவில்லை. மூன்று ஆண் மக்களும், ஆறு பெண் மக்களும் பிறந்தார்கள்; ஒரு மகனும், இரண்டு பெண் குழந்தைகளும் இளமையிலேயே இறந்துவிட, இன்று என் தம்பி தங்கையராக ஐந்துபேரிருக்கிறார்கள். எல்லா மக்களுக்கும் நல்ல கல்விப் பயிற்சி தந்துள்ளார்கள். தம் மக்கள் நலத்தில் அவர்கள் எடுத்துக்கொண்ட சிரமம் கொஞ்சமன்று. அனைவரையும் வாழ்க்கையின் நல்ல நிலையில் வைத்தபின் ஊரே மனச்சாந்தியோடு 26—6—'36-ல் தம் ஐம்பத்தெட்டாவது வயதில் இறைவன் திருவடி நிழல் அடைந்தார்கள்.

## சித்திரப் படிப்பு

என் தந்தையாருக்கு இளமையிலேயே கவின் கலைகளில் (Fine Arts) பற்று ஏற்பட்டது. அதன் பயனாகப் பள்ளிப் படிப்பில் மனம் செல்லவில்லை. அவர்கள் தகப்பனார் இவர்களை ஆங்கில உயர்தரப் படிப்பிற்கு அனுப்ப வேண்டுமென்று விரும்பியும், இவர்களுக்கு அப் படிப்பில் பற்றுதல் இல்லாமையால் தம் பதினெட்டாவது வயதில், நாசரேத்துக்குச் சென்று அங்கு, Rev. Margoschis நடத்தி வந்த Art Industrial School-ல் Drawing வகுப்பில் மாணவராகச் சேர்ந்து மூன்று வருடம் படித்தார்கள். அங்கு நடந்த கவர்ண்மெண்ட் டிராயிங் பரீட்சையில் Group Certificate வாங்கினார்கள். பின்பு மூன்று வருஷம் (1900 — 1902) சென்னையிலுள்ள சித்திரக் கலாசாலையில் (School of Arts) படித்தார்கள். அவர்கள் டிராயிங் பரீட்சையில் Diploma வாங்கினதும், Advanced Grade Painting பரீட்சை பாஸ்பண்ணினதும் அங்கேதான். அவர்கள் கவர்ண்மெண்டார் நடத்திய ஆறு பரீட்சைகளில் முதல் வகுப்பிலும், அதில் 5 பரீட்சைகளில் சென்னை மாகாணத்திற்கே முதல்வராகவும் தேறியிருக்கிறார்கள். சென்னைச் சித்திரக்கலாசாலையின் Asst. Supt. திரு. வேலாயுத ஆச்சாரியாரவர்கள் இவர்கள் ஆசிரியராக இருந்தார்கள். தமது சித்திர விற்பத்திக்குப் பொறுப்பாளி அந்த ஆசிரியரே என்று பலமுறை சொல்லியிருக்கிறார்கள். இவர்கள் அந்த ஆசிரியரிடம் என்றும் குன்றா அன்பும் பணிவும் உடையவர்கள். 1922, நவம்பரில் டிராயிங் உயர்தரப் பரீட்சைக்காக, நான் சென்னை சென்ற பொழுது என் தந்தையார் என்னுடன் வந்து அந்த ஆசிரியரிடம் கூட்டிச்சென்று அவர் தம் ஆசி பெற வைத்தார்கள்.

சித்திராசிரியர்

என் தந்தையார் சித்திரப் படிப்பில் உயர்ந்த பரீட்சைகள் கொடுத்திருந்தும் அத் துறையில் உயரிய உத்தியோகம் ஒன்றும் வகித்தாரல்லர். இதற்குக் காரணம் அவர்கள் திருநெல்வேலியைவிட்டு வெளியே போக விரும்பாமையே யாகும். 1907 முதல் 1909 வரை, மதுரை Government Technical Institute-ல் டிராயிங் மாஸ்டராக் வேலைபார்த்து விட்டுத் திருநெல்வேலிக்குத் திரும்பி வந்துவிட்டார்கள். 1913-ம் வருடம், மே மாதம், திருச்சூர் Government Technical, Commercial & Industrial School-ல் Senior Art Instructor ஆக நியமனஞ்செய்யப்பட, இவர்கள் அந்த ஊருக்குச் சென்றதும் திரும்பி வந்து வேலையை வேண்டாமென்று எழுதிவிட்டார்கள். பின்னர் அதே வருடம், அக்டோபர் மாதம், கோயம்புத்தூர் விவசாயக் கலாசாலையில் Government Mycologist-ன் கீழ் Head Artist ஆக அமர்ந்து மூன்று மாதம் வேலை பார்த்தார்கள். கோயம்புத்தூரின் சீதோஷ்ணமும் ஒத்துக்கொள்ளாமற் போகவே சொந்த ஊருக்குத் திரும்பிவிட்டார்கள். ஒருவேளை கோயம்புத்தூரிலேயே தங்கி வேலை பார்த்திருந்தால் உயரிய உத்தியோகங்கள் பெற்றிருக்கலாம்.

அவர்கள் முதன் முதலில் பதினைந்து ரூபாய் சம்பளத்தில், தென்னிந்திய ரயில்வே கம்பெனியில் அம்பாசமுத்திரத்திலிருந்த இன்ஜினியரின்கீழ், draftsman வேலை பார்த்தார்கள். ஆனால் இந்த வேலையை அதிக நாள் வகிக்கவில்லை. அப்போது திருநெல்வேலியில் பிரபல பள்ளிக்கூடமாயிருந்த இந்து கல்லூரியில் 1903-ம் வருஷம் மார்ச்சு மாதம், உதவிச் சித்திர ஆசிரியராக அமர்ந்தார்கள். அப்படி அக்காலத்தில் இந்து கல்லூரியில் ஒரு இடம் பெறுவதற்குப் பட்ட

பிரயாசை பெரிதெனஅவர்கள் அடிக்கடி கூறக் கேட்டிருக்கிறேன். 1903-ம் வருடம் அப்பள்ளியில் உதவிச் சித்திராசிரியராக அமர்ந்தவர்கள் பின்னர் சம்பளத்தில் படிப்படியாய் உயர்ந்து தலைமைச் சித்திர ஆசிரியராகி, அப்பள்ளியில் 30 வருடம் உழைத்து, 1933-ம் வருடம் ஓய்வெடுத்துக்கொண்டார்கள். இந்த 30 வருடங்களுக்கு இடையில்தான் அவர்கள் மதுரையிலும் கோயம்புத்தூரிலும் கொஞ்ச கொஞ்சக் காலம் வேலையின்பேரில் சென்றது. திருநெல்வேலி இந்துகலாசாலை அவர்களது சித்திர விற்பனத்தை யெல்லாம் காட்டுவதற்கு இடமாகவில்லை என்றாலும் அவர்கள் அப்பள்ளியில் ஆசிரியராக அமர்ந்தது, அப்பள்ளியில் பயின்று பின்னர் உயர் பதவிகளில் அமைந்த நூற்றுக் கணக்கான மாணவர்கள், இன்றும் "டிராயிங் மாஸ்டர் தோண்டைமானை" மறக்காதிருக்கச் சாதகமா யிருந்தது. பல வருஷ காலம் சித்திர ஆசிரியராக வேலை பார்த்த என் தந்தையாரது முழு அனுபவமும் அவர்கள் 1919-ல் வெளியிட்ட "Indian Pupils' Drawing Series" என்ற புத்தகங்களிற் காணலாம். அப் புத்தகங்களைப் பல பெரியார்கள் * போற்றிப் புகழ்ந்திருக்கிறார்கள்.

## சித்திரமும் புகைப்படமும்

சென்ற சில வருடங்களுக்கு முன், சித்திரம் வரைதலிலும், புகைப்படம் பிடித்தலிலும் திருநெல்வேலியில் என் தந்தையார் இணையற்றவர்கள் என்பதை யாவரும்அறிவார்கள்.

---

* அப் புத்தகங்களைப்பற்றி அப்போது திருநெல்வேலியில் Inspector of Schools ஆக இருந்த திரு. நடேசய்யர் அவர்கள், M. A., L. T., "So far as I can see, these books are bound to be very useful and stimulating to the pupil for whom they are intended. The author systematically and skilfully leads from observation to observation and achievement to achievement." என்று எழுதியுள்ளார்கள்.

இன்று மதுரைத் திரவியம் தாயுமானவர் இந்து கலாசாலை யின் ஆங்கிலச் சொற்பொழிவு மண்டபத்தை அலங்கரித்து நிற்கும் திரு. விங்க்ளர் துரையவர்கள் படமும் ஏனைய படங் களும் என் தந்தையாரது கைத்திறனை விளக்குவன. இன் னும், திருநெல்வேலியிலும், ஏனைய ஊர்களிலும் உள்ள பிரபுக்கள் பலர் வீட்டில் என் தந்தையார் எழுதிய பெரிய பெரிய படங்கள் தொங்குவதை நண்பர்கள் அறிவார்கள். 1923-ம் வருடம் திருநெல்வேலி – திருச்செந்தூர் ரயில்வே லயனைத் திறந்துவைக்க மாட்சிமை தங்கிய கவர்னர் பெரு மகன் லார்ட் வில்லிங்டன் வந்திருந்தபொழுது அவர் கையில் வைத்துக்கொள்ள ஒரு நிகழ்ச்சிக் குறிப்பொன்று சித்திரத் தில் வரைந்து கொடுத்தார்கள். அச்சித்திரத்தில் திருநெல் வேலியிலுள்ள கோயில், பாலம் முதலிய காட்சிகளையும், திருச்செந்தூர் கோயில், கடற்கரை, மணல்மேடு முதலிய காட்சிகளையும்; இவ் இரண்டு ஊர்களையும் பிணைத்துப் புகை வண்டிகள் ஓடுவதையும் காட்டி வரைந்திருந்தார்கள். இச் சித்திரத்தைக் கையில் வாங்கிய கவர்னர் பெருமகனார், "இவ் வளவு கற்பனைத்திறன் உடைய சித்திரிகனை நான் பார்க்க வேண்டும்" என்று விரும்பி யழைத்து அளவளாவிப் பேசி னார். அச்சித்திரத்தைப் பற்றி அப்போது திருநெல்வேலி யில் கலெக்டரா யிருந்த திரு. டேவிஸ் துரையவர்கள் மிகவும் புகழ்ந்து கடிதம்* எழுதியிருக்கிறார்கள். இது ஒன்றே என் தந்தையாரின் சித்திர விற்பனத்தை விளக்கப் போதிய தாகும்.

---

* திரு. E. A. டேவிஸ் துரை அவர்கள் 14—3—23-ல் எழுதிய கடிதம்:— "Mr. Tondaiman, Artist and photographer, Tinnevelly prepared a very artistic and illuminated programme for His Excellency on the occasion of His recent visit to Tinnevelly and His Excellency expressed high appreciation of the craftsmanship of the work,"

புகைப்படம் பிடித்தல், சித்திரத் தொழிலுக்கு ஒரு உதவித் தொழிலேயாகும். சித்திரத்தில் வல்லவரான என் தந்தை புகைப்படம் பிடித்தலில் விசேடங்கள் பலவுண்டு. புகைப்படங்களில் உள்ளதை இல்லது போலவும், இல்லா ததை உள்ளது போலவும் செய்யும் கைவினை சித்திரத்தில் வல்லுநரான ஒருவருக்கே சாலும். ஆகவே என் தந்தையா ரது புகைப்படங்கள் பலரும் போற்ற அமைந்தது வியப் பன்றே. என் தந்தையாரிடம் சித்திரங் கற்ற மாணவர் களும் புகைப்படம் பிடிக்கக் கற்றவர்களும் பலருண்டு.

## சமயக் கோள்கை

என் தந்தையாரின் சமயக்கொள்கை பலருக்கு விடுகதை யாகவே இருந்திருக்கிறது. இவர் சைவரா, வைணவரா, கிறிஸ்தவரா அல்லது பிரமசமாஜியா என்று பலர் அவ்வப் போது ஐயப்பட்டதுண்டு. உண்மையில் அவர்கள் "எம்மத மும் சம்மதம்" என்ற விரிந்த கொள்கையுடையவர்கள். சமய உண்மை காணும் அவாவால் தூண்டப்பட்டுப், பல சமய வாதிகளுடன் பழகியிருக்கிறார்கள். நல்லதொரு சைவ குடும்பத்திலே பிறந்தவர்கள். சிவபிரானது அம்சங்களில் நடராஜ மூர்த்தமே அவர்களைப் பெரிதும் ஈடுபடச் செய்த தென்னலாம். சித்திரத்திலும் சிற்பத்திலும் மனங்கவிந்த என் தந்தையார், நடராஜரது திருநடத்தை அனுபவித்தது வியப்பன்று. இளமையில் அவர்கள் உள்ளத்தில் ஊறிய சமயம் சைவமே. அதன்பலனே, அவர்கள், திருவொற்றி யூர் தியாகேசர் காதல், நெல்லை நாயகர் குறம், அருட் கடன் விண்ணப்பம், ஆட்கொண்ட பதிகம் முதலியன பாடியது.

அவர்களுக்குக் கிறிஸ்தவ நண்பர்கள் பழக்கம் அதி கம். கிறிஸ்து பெருமானின் தன்னலமற்ற தியாகத்தைப் பெரிதும் போற்றுவார்கள். எல்லாம் வல்ல இறைவனை

நோக்கிச் செய்யும் பிரார்த்தனை (Prayer)யில் அவர்களுக்கு நம்பிக்கை பெரிதும் உண்டு. அவர்களது அந்திய காலத்தில் வியாதியினால் தாங்கமுடியாத துன்பம் நேர்ந்தபொழுது அவர்களது நண்பரான திரு. செல்வின் ஐயர் (Rev. G. T. Selwyn) அவர்களைக் கூட்டிவந்து வீட்டில் ஒரு பிரார்த்தனை செய்வித்தார்கள்.

சமய உண்மை காண விரும்பி முயன்றபொழுது, பிரம சமாஜக் கொள்கைகளைப் படிக்க நேர்ந்தது. திருநெல்வேலியில், பிரம சமாஜ ஸ்தாபகரான திரு. P. M. கைலாசம் பிள்ளையவர்களோடு இவர்கள் ஒத்துழைத்தார்கள். பிரம சமாஜ சங்கத்தின் அமைச்சராய் அமைந்து பல வருடங்கள் தொண்டுபுரிந்தார்கள். அவர்கள் பிரம சமாஜத்தையும், அம்மத ஸ்தாபகரான, ராஜா ராம் மோகனரையும் பற்றிக் கொண்டுள்ள கருத்துக்கள் "ராஜா ராம் மோகனர் வாழ்த்து" என்ற பாக்களில் காணலாம்.

என் தந்தையார் சிலகாலம், ஸ்ரீ ராதாஸ்வாமிகளின் சத் சங்கத்தில் ஒரு அங்கத்தினராய்ச் சேர்ந்து அவர்களது யோகாப்பியாச முறைகளில் பழகினார்கள். அந்தக் காலத்தில் இறைவன் திருவடிகளை நினைந்து பலமணி நேரம் தியானத்திலிருப்பார்கள். அப்போதுதான் அவர்கள் "தியானச் சிந்தனைகள்" என்ற புத்தகம் வெளியிட்டார்கள். அப்புத்தகத்தின் முன்னுரையாக, "திருவருள் எனக்குக் கற்பித்தபடியே எழுதுகின்றேன். எனக்கென இதில் ஒன்றுமில்லை" என்று எழுதியுள்ளார்கள்.

இதுவரை சொல்லியவற்றால், என் தந்தையார் ஒரு சமயக் கோட்பாட்டிலும் நிலைத்து நின்றவரல்லர் என்று கருதுதல் தகாது. அவர்கள் சமய உண்மை காணப் பெரிதும் உழைத்தவர்கள். அவர்கள் சமயத்தையும், கடவுளை

யும் பற்றிக் கொண்டுள்ள கருத்துக்கள், அவர்களது தனி நிலைச் செய்யுட்களிலும் (Sonnets) பிரமமுக்தம் என்ற நூலி லும் காணலாம். என் தந்தையார் இறந்ததைக் கேட்டுத் துக்கம் விசாரிக்க வந்த நண்பர் திரு. T. K. சிதம்பரநாத முதலியார் அவர்கள், "சமய சம்பந்தமாக நல்ல ஆராய்ச்சி செய்துவந்த ஒரு நண்பரை இத் திருநெல்வேலி இழந்தது!" என்று கூறினார்கள். என் தந்தையாரது சமய அறிவைப் போற்றாதவர் இல்லை.

அவர்களுக்குப் பகவத் கீதையில் பெரிதும் ஈடுபாடு உண்டு. பகவத் கீதையை எத்தனை முறை, எத்தனை மொழி பெயர்ப்புக்கள், எத்தனை வியாக்கியானங்கள் படித்திருப்பார் கள் என்று கணக்கிட முடியாது. அவ்வரிய நூலில் நான்கு அத்தியாயங்களை அகவற்பாக்களில் மொழிபெயர்த்துள்ளார் கள்.

## சமூகத் தொண்டு

பிரம சமாஜியான என் தந்தை சமூகச் சீர்திருத்தத் தைப் பெரிதும் விரும்பியவர்கள். நமது பெண்மக்கள் விடு தலையடைய வேண்டும் என்று சதா காலமும் பேசுவார்கள். "பெண்ணெனில் பேயெனப் பிதற்றிடும் மாந்தர் கண்ணி லார் என்றே கழறுதற்குரியர்" என்பது அவர்களது கொள்கை. இத்துடன், பண்டைப் பெருமைவாய்ந்த எங் கள் தொண்டைமான் குலம், தற்போது கல்வி, அறிவு, ஒழுக் கங்களில் குன்றியிருப்பதை உணர்ந்து, அம் மக்கள் ஈடேற வேண்டுமென விரும்பினார்கள். எங்கள் சமூக முன்னேற் றத்திற்காக உழைத்தவர்கள் மூவர் என்னலாம். அவர்கள், தென்காசி, திரு. குருமூர்த்தி தொண்டைமானவர்களும், பாளை யங்கோட்டையில் என் மாதுலர், திரு. மனகாவலப்பெருமாள் தொண்டைமானவர்களும், என் தந்தையுமாவர். என்

தந்தையார் தொண்டைமான் கல்வியபிவிருத்தி சங்கம் ஒன்றமைத்து அதில் மாணவர்களைப் பயிற்றினார்கள். சிலமாத காலம், "தொண்டைமான்" என்ற மாதப்பத்திரிகை நடத்தினார்கள். புதுக்கோட்டை அரசர் பெருமகனைப் பேட்டி காணத், தன் குல மக்களில் பலரை அழைத்துக்கொண்டு, குற்றாலத்திற்கும், புதுக்கோட்டைக்கும் சென்று தங்கள் குறைகளை வெளியிட்டார்கள். மன்னார்குடியில் 1929-ம் வருஷம் நடந்த கோப்பெருங் கள்ளர்குலப் பெரு மகாநாட்டிற்கு, திருநெல்வேலியிலிருந்து சில பிரதிநிதிகளோடு சென்று அங்குள்ளாரால் ஆதரிக்கப்பட்டார்கள். தொண்டைமான் குலமக்களின் முதல் மகாநாட்டை வண்ணார்பேட்டையில் கூட்டி வேண்டிய அறவுரைகள் கூறினார்கள். அவர்கள் இவ்வாறு தம் சமூக முன்னேற்றத்திற்குப் பல துறைகளில் உழைத்திருக்கிறார்கள். அவர்களின் உழைப்பைத் தொடர்ந்து நடத்துவதே நாங்கள் அவர்களுக்குக் காட்டும் நன்றியாகும்.

## ஆங்கிலப் பாக்கள்

என் தந்தையார் உயர்ந்த ஆங்கிலப் படிப்புப் படித்துச் சர்வகலாசாலைப் பட்டம் ஒன்றும் பெற்றாரல்லர். எனினும், தாம் அடைந்திருந்த ஆங்கில பாஷா ஞானத்தைப் பல முறைகளால் விருத்தி செய்துகொண்டார்கள். இயற்கையாகத் தமிழ்க் கவிப்பற்றும், தமிழ்க் கவிபாடும் திறனும் உடையவர்கள் ஆனதினால், மேலநாட்டுக் கவிகளைப் படிக்கவும் அவர்கள் சொல்லுங் கருத்துக்களை அறிந்து அனுபவிக்கவும் மிகவும் பிரியப்படுவார்கள். வங்க நாட்டுக் கவீந்திரராகிய, ரவீந்திரநாத் டாகூரிடம் அளவு கடந்த அபிமானம் உண்டு. டாகூர் எழுதியுள்ள புத்தகங்கள் ஒன்றுவிடாமல் படித்திருப்பார்கள். அவர்கள் ஆங்கிலத்தில் பாடியிருக்கும் மனன

மாலேகள் டாகூரின் நடையையும் முறையையுமே பின்பற்றி யிருக்கக் காணலாம். அப்பாட்டுக்கள் என் தந்தையாரது உள்ள நிலையை ஒருவாறு விளக்குவதாகும். டாகூர் மீது கொண்ட அபிமானமே அவர் வெளியிட்ட "Trumpet" என்னும் கவியை "எக்காளம்" என்ற தலைப்புடன் மொழி பெயர்ப்பதற்குக் காரணமா யிருந்தது.

## தமிழ்ப் பாக்கள்

எங்கள் குடும்பத்தினர்க்குப் பரம்பரையாகத் தமிழ் மொழிப் பயிற்சி இருந்துவருகிறது. எனது பாட்டனர், திரு. சிதம்பரத் தோண்டைமான் அவர்களும் அவர்களின் சிறிய தகப்பனர் திரு. அருணசலத் தோண்டைமான் அவர்களும் திருப்புகழ்ச் சாமி என்ற முருகதாச சுவாமிகளின் சிஷ்யர்கள். இவர்கள் இருவரும் தமிழ்ப் பாக்கள் பல பாடியுள்ளார்கள். என் பாட்டனர் பாடிய நெல்லைப் பள்ளில் ஒரு பாட்டு வருமாறு:

உமிழ்மது துன்று கொன்றையார்
விடை கொண்டெங்கும் திரிபவர்
உமையாள் கொழுநன் உலகசயனன்
கலையாள் கொழுநன் உபயற்கறிதற் கரியவர்
அமிழ்தினின் சுவைபனுவல் மூவருக்
கரிய நற்பதம் அளிப்பவர்
அயிலே நிகர்த்த விழியாள்காந்தி
மதியோ டமர்ந்த நெல்லேயர்
தமிழ் தருமுனி மலேயினின்றிழி
தாம்பிர பரணிபாய் கழனியில்
தழைகொள் தொளியில் மிதிகொள்பள்ளர்
சாச மொழிகள் மொழியவே

குமிழ்த்த முல்லையைக் காட்டிநின்று
குறைப் பொழுதையும் போக்குநீர்
குரவை யொழித்து முடியையவிழ்த்துக்
குனிந்து நடுங்கள் பள்ளியரே.

இன்னும் என் பாட்டனர் பாடியுள்ள பாட்டுக்கள் பலவுண்டு. அவைகளையும் தொகுத்து வெளியிட அவா மிகவுடையேன்.

என் தந்தையாருக்கு இளமையிலேயே தமிழ் மொழிப் பற்று எழுவதாயிற்று. அவர்கள் இராமலிங்க சுவாமிகளின் அருட்பாக்களையே அடிக்கடி பாடிப் பரவசப்படுவார்கள். இராமலிங்கசுவாமிகளின் செம்பாகமான நடையையும் பக்திப் பெருக்கையும் உணர்ந்து உணர்ந்து அனுபவிப்பார்கள். என் தந்தையார் பாக்கள், விஷேடமாக அருட் கடன் விண்ணப்பம், ஆட்கொண்ட பதிகம் முதலியன, இராமலிங்க சுவாமிகளின் செம்பாகமான நடையையே தழுவியிருக்கின்றன. மாணிக்கவாசகரது திருவாசகம், என் தந்தையார் படிக்கும் நூல்களில் சிறந்ததாகும். தெய்வப் புலவர் திருவள்ளுவரும், கவிச் சக்கரவர்த்தி கம்பரும் அவர்களுக்கு விலக்கானவர்கள் அல்லர். அவர்கள் இயற்றிய தமிழ்ப்பாடல்கள் அளவிறந்தன; அவற்றுள் சிலவற்றை மட்டும் தொகுத்து தமிழ்ப் பாக்கள் என்னும் பகுதியில் இங்கு வெளியிடுகிறேன்.

## நாயக நாயகி பாவம்

எல்லாம் வல்ல இறைவனைப் பக்தர்கள் பல பாவங்களால் வழிபடுவதுண்டு. காலஞ்சென்ற கவி பாரதியும், கண்ணன் பாட்டில், கண்ணனைத் தாயாகவும், தந்தையாகவும், எஜமானனாகவும், குருவாகவும், தோழனாகவும், நாயகியாகவும், நாயகனாகவும் பாவித்துப் பாடுகிறார். இவற்றுள், நாயக நாயகி பாவமே என் தந்தையார் பாடிய பாட்டுக்களிலெல்லாம்

மலிந்திருக்கும். "திருவொற்றியூர் தியாகேசர் காதல்", "நெல்லை நாயகர் குறம்" எல்லாம் இப்பாவத்தையே அடிப்படையாகக் கொண்டு பாடப்பெற்றிருக்கின்றன. ஆங்கிலப் பாக்களில் "Wedded when young" என்ற தலைப்புடைய பாட்டும் இக்கருத் தமைந்ததுதான். பாரதி நூல்களில் கண்ணன் பாட்டு முகவுரையில், காலஞ்சென்ற, வ. வே. சுப்பிரமணிய அய்யர் அவர்கள், " இந்தப் பாவத்தை ஆளுவது கத்தியின் கூர்ப் பக்கத்தில் நடப்பதைப் போன்ற கஷ்டமான காரியம். ஓர் வரம்பு இருக்கிறது; அதற்கு அப்புறம் இப்புறம் போய் விட்டால், அசந்தர்ப்பமாகிவிடும். 'கருப்பூரம் நாறுமோ; கமலப்பூ நாறுமோ; திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித் திருக்குமோ' என்று தொடங்கும் ஆண்டாளுடைய பாசுரங் களைப்போல செயிரின்றி இப்பாவத்தைப் பாடுவது அநேக மாய் அசாத்தியம்" என்று கூறுகின்றார்கள். திரு. வ. வெ. சு. அய்யர் அவர்கள் என் தந்தையிடம் நெருங்கிப் பழகிய நண்பர். இருவரும் இலக்கிய சம்பந்தமாகவும், சமய சம்பந்தமாகவும் பல மணி நேரங்கள் பேசிக்கொண்டிருப்பார்கள். வ. வெ. சு. அய்யர் அவர்கள் என் தந்தையின் பாக்களில் காணும் நாயக நாயகி பாவ முறையைக் கேட்டுக், "குற்றமறப் பாடுவது உங்களுக்குச் சாத்தியமா யிருந்திருக்கிறது!" என்று வியந் திருக்கிறார்கள்.

## தமிழ் வசனம்

என் தந்தையார் எப்போதும் தமிழ் நூல்களைப் பயிலு வதிலும் எழுதுவதிலும் ஊக்கங் காட்டுவார்கள். பல பெரிய கூட்டங்களில் அவர்கள் "உண்மை", "மூன்றிற உட்கிடை", " இயலானந்தம் ", " எம்மதமும் சம்மதமே", " இந்தியச் சிற்பம்" முதலிய பெரிய விஷயங்களைக் குறித்து விரிவுரைகள் நிகழ்த்தியிருக்கிறார்கள். அவர்கள் 1913 டிசம்பரில் நடை

பெற்ற, திருநெல்வேலி மாணவர் சங்க வருஷோத்சவத்தன்று "உண்மை" யென்னும் பொருள்பற்றிப் பேசியதை உட னிருந்து கேட்ட, என் தந்தையின் ஆப்த நண்பரும் ஸ்ரீ வானவாமலை மடத்து ஆஸ்தான வித்வானுமான, தென் திருப்பேரை அபிநவகாளமேகம் ஸ்ரீ அனந்தகிருஷ்ணையங்கார் அவர்கள்,

உண்மையிலா* னென்ற னுயிர்த்துணைவன் முந்தையா
உண்மை விடயமெடுத் தோதினன் — வண்மைமிகு
நெல்லைமா ணக்கரவை நேர்ந்தபெரி யோரமுதாம்
நல்லமழை யென்ன நவின்று

என்று பாடியுள்ளார்கள். என் தந்தையாரின் வசன நடைக்கு அவர்கள் எழுதிய "தியானச் சிந்தனைகள்", "இந்தியச் சிற்பம்" என்பவைகள் எடுத்துக்காட்டாம்.

## முடிவுரை

திருவாளர் ராவ் சாஹேப் V. P. சுப்பிரமணிய முதலியா ரவர்கள் இம் மலரின் முகவுரையிற் சொல்லுகிறபடி, என் தந்தையார் பாடல்களும், என் நினைவுகளும் படிப்பவரது உள்ளத்தில் ஆழ்ந்த தெய்வ பக்தி, சர்வ சமய சமரச பாவனை, குல முன்னேற்றம், சனுச்சாரச் சீர்திருத்தம் என்ற நற் காரியங்களிற் சிந்தனையைச் செலுத்தச் செய்தால், நான் இந் நினைவு மலரைப் பதிப்பித்ததின் பயன்பெற்றவ னாவேன்.

சித்திராலயம்
திருநெல்வேலி

தோ. மு. பாஸ்கரன்

---

* உண்மையிலான் - உள் மை யிலான் - உள்ளத்தில் களங்கமில்லாதவன்.

## AM I APART?

Mother Dear? Am I a being apart from Thee?

Nearer am I, Dear Mother, to breathe
the fragrance of Thy sweet breath.

I worship Thee Mother, and bow low
at Thy lotus feet.

Blame me not Mother Divine, if merged in my play-
things; absorbed in my toys and mates,
I forget Thee. Ah! Blame me not.

I come to Thee Mother, All my being is thine.

My joys - yea! - my cares, I have none here
or anywhere.

Mother Dear! Am I a being apart from Thee?

---

## FEAR NOT, MY CHILD!

My child! Why art Thou bawling so?

"Mother Dear! Mother Dear!! Phantoms and goblins threat me in my dreams. Wrap me Mother in Thy saree, clasp me to Thy bosom."

Do they appear even when wide awake?

"No Mother! No! They vanish when I open my eyes, but Ah, they are making faces with me—their grimace I cannot bear."

"Mother Dear, Do not leave me and go,
for I want to hide in Thee—Thy lap I crave,
encircle me within Thy fold."

Yes! Yes, my child! Nearer I am to Thee
for Thou wert in my bosom from the beginning
and Thou art mine to the end.

Fear not, my child!

---

## THE MIGHTY LORD

Hark!. Oh Kings of all realms! The mighty
Conqueror of all worlds is coming!
Surrender all to Him, thy domains
and thy subjects.
He comes to dethrone you.

He seeks nor wealth nor valour, nor pride nor glory.
Ye beggars and peasants! Throw down
your bowls and ploughs.
Surrender ye! at His bugle's call.

He comes with the tumultuous rumbling of thunder
and the flashes of lightning in heaven.
Hark! Oh Kings of all realms.

---

## MY CLOCK IS DEAD!

My heart ceased to beat at midnight, for I heard not the ticking of my clock. I wound it up only three days ago to its full key and the week's end has not come.

What has made then my clock silent?

I lighted my lamp and found the clock in its place; no robber has taken it away.

I touched its cold body and shook it gently.

Alas! There was no movement of the hands.

The clock was dead.

O! that my clock should die so soon!

---

## WEDDED, WHEN YOUNG

Wedded me when young! When for mate I cared not.
Wedded to Thine pleasure, pride and peace,
Wedded wife am I.

Enchanted I was from a glance at Thy winning eyes,
Yours was I, mine were You, played we both,
unknown on the shores of Love and Life
—played we.

Summer blossoms are sweet and delightful.
Southern breeze woos us calmly.
Sun sets dark, singing waves sound me gently-
Where are You my Lord?

No messenger I have, no place I know. No, not I,
but You should come. — When young I was
Your bride; in bloom I am Yours; in Love and
Life, I am Thine own.
I am Your wedded wife when young.

---

## GLORY BE TO THEE, MY LORD!

Glory be to Thee My Lord, command Thy servant
to serve Thee with a willing heart.
Give him courage to work hard
at any work entrusted to him.

Full of Thy charms, Dame Nature unceasingly
woos to represent Thee, the active worker of
all the worlds, within and without.

The twinkling stars, the roaring waves, the bustling
trees, the showering rain, all display Thy glory.
Thou art ever active.

How can I be lazy? I have grown sluggish of
late. Transform Thy servant with a spark of
Thy grace.
Let him march forward at Thy command.



## HOW THOU AND FROM WHERE ?

Oh, Master Craftsman ! How Thou bringest forms and from where ? Unhewn stone, yesterday it was ; but Thou hast brought today a beauti- -ful angel out of it. Hou thou and from where ?

A deserted land, barren I saw yesterday ; but how Thou hast built these mansions in a night ! Are all of them illusory ! No ! I perceive them, solid and thick.

Block of wood it was yesterday ; but how hast Thou made it to tune a melody, out of the fibres, with a man to sing.
Tell me the secret, I pray. How Thou
and from where ?

---

"Bring all my riches, accumulated, consigned before me now, and heap them in that corner."

The dying man looking at them says:

"How I have suffered to secure you! What difficulties I endured for you! Can you keep me alive for one more day?"—Nobody answers.

"Bring my dutiful wife, my loving children and all my relatives."

The dying man in feeble voice, requesting one and all says: "My flesh and blood you are! All these years, I sheltered you all in my house. I sacrificed my pleasures for you. Can any of you procure a life for me for a day more?"—

Nobody answers.

"Bring all the physicians in the town, boastful and plain, with costly medicines to suit."

The dying man in pleading voice says:

"Gentlemen! Doctors, can you give me elixir to prolong my life a few minutes more? Take all my wealth, spare that medicine from your chest."—"Nay, we cannot" say all.

What! My wealth! My relations! Doctors! — all cannot spare me, more life than destined to me in this world, yet I long to live more.

Let me go to the other world, as people say, and ask the people there to give me more life. Can they not give? — Let me try.

---

Hail O Gopala! Thou, the shepherd
of the frail dumb lambs
And cows that graze
on the Brindaban border land.
Thou, the friend of the urchins,
who play forgetting their ownselves;
With you they dance merrily,
enraptured by Thy form. Hail O Gopala!

Hail O Gopala! Thou art a great Magician.
Thy forms Thou changest
In tinkling of seconds,
like a fish in the pond swimming swiftly
And Thou becomest a horrible tortoise,
and then an ugly pig
With horns protruding, furrowing the earth;
what shapes! O Gopala!

Hail O Gopala! Thy transcendental visions
—what! Thou a monstrous lion,
Thou the cave-dweller with gleaming teeth,
Thou the wood-cutter
And tiller of the ground,
and husbandman with a chaste woman
To reign a hierarchy
And Thou a moral teacher. Hail O Gopala!

Hail O Gopala! Thou becomest now
—Diplomat with contending kings—
Thy arguments and orders are steady
—no one to impeach.
Thy plays are innumerable.
Wilt Thou be a judge or a destroyer
Of all Thy forms;
wilt Thou form new shapes? Hail O Gopala!

Hail O Gopala! Thou art All in all;
what! Thy charms are great
To great maidens from dusty homes
to embrace Thee in open plains;
Thy fascinating splendour drags
everything I see to your herd
To make it forget itself
And merge in Thee. Hail O Gopala!

---

## LOVE DIVINE

Oh! Love Supreme! Love Divine, a love
that binds soul to soul.
How begetest Thou, Thy 'witching charms.
How elevatest Thou to sour high and high.
Art Thou a tendency born — a created one?
or Thou the ruler who wieldest the earth?

Blossomest Thou in mother's lap; cherishest Thou in maiden's heart; apart from Thee, who can whisper a tender word and promise a land of ecstasy beyond all cares.

Thou governest all this tiny world, all beings proceedeth from Thee
Ah Thou Mother Superior! Bless O Love,
Love Divine.



புதுக்கோட்டை, மகா ராஜ ராஜ ஸ்ரீபிரகதாம்பதாஸ
விஜய ரகுநாத துரை ராஜ தோண்டைமான் பகதூர் அவர்களது

# மெய்க்கீர்த்தி

[13—10—1923 விஜயதசமியன்று, புதுக்கோட்டையில்
இராஜ சமுகத்தில் பாடப்பெற்றது.]

---

சீர்பெறு பாரதத் திகழ்நா டதனில்
நேர்பெறு வேங்கடம் நேர்வடக் காகவும்,
ஆர்க்கு முவரி அணிகிழக் காகவும்,
மேற்குப் பவழ மலையர ணாகவும்,
பிணாகை தெற்காய்ப் பீடுற விருக்கும்,
“தொண்டைநன் னாடே சான்றோ ருடைத்”தெனப்
பண்டைநற் புலவர் பாடியுண் மகிழ்வர்.
பாவேந்தர் பாடிய மூவேந்தர் தம்முளும்
மாவேந்த னாய்த்திகழ் மன்பெருங் கிள்ளிச்
சோழ னொருக்கால் துகடீர் கீர்த்தி
வடபா லுலகத்து வையம் புகுந்து
திடமாய் நாகநாட் டரசியை மணந்து,
அன்னவள் மகற்குத் தன்னா டதனை
முன்மக னென்னு முறைகொடு பகுத்துக்,
கொடுத்தநன் னாடே குவலயம் புகழும்
தொண்டைநன் னாடாம், தொல்புகழ் மிகுஆ
தோண்டைநன் னாடத் தோன்றலின் வழித்தாய்ப்

பெரும்பா ணாற்றுப் படைகொளுந் திரையன்
விருதுகள் பலவே ; வேண்டுவோர் அறிக !
நந்தியம் பெருமான் கலம்பகம் கேட்டோர்
பிந்தியு மொருநூல் பேணுவ ரிலரே !
சாமந்த நாரணன் தன்புகழ் அறிவோர்
ஏ! மந்த மாக விருப்பவ ரேயோ !
கலிங்கத்துப் பரணிக் கடைதிறப் பறிவோர்
கருணா கரனின் கைவல னுணர்ந்து
வருநா ளெல்லாம் மகிழ்கொடு மதிப்பர் !
இன்னணம் எண்ணிலாத் தொண்டையர் கீர்த்தி
மூன்று ளதனில் முரணறக் காண்பேம்.
என்னே ! அவர்தம் ஏற்றமும் ! பக்தியும் !!
உன்னற் கரியதாம் உவப்பே கொடுப்பன.
அத்தனைச் சிறப்போ டரசுவீற் றிருந்தோர்
எத்தனை யாயினர்? இடைப்படுங் காலக்
கொடுமையின் மெலிந்து கோப்பெருஞ் சோழர்,
வழுதியர், தம்மிடை வாகை மாலைகொள்
பழுதிலாச் சேனைத் தலைவராய்ப் புகுந்து,
வென்றி மிகுந்து, வீர ரிவரெனும்
நன்றிகொள் களமராய் நானிலத் திருப்பவும்,
பாரத நாட்டிடைப் பற்பலர் படைகொடு
மாரண வீரர்வந் திடைபுக் காங்கு
கண்டன கொண்டு கொண்டன விடாது
பண்டையோர் தம்மைப் பாழுற விடுத்தனர்.
தொண்டையோர் தாமோ தொன்னலம் பேணித்
தோண்டிநன் னகரைக் கண்டுட னமைத்து,

வாழ்ந்து வருங்கால் வளமிகக் கண்டு,
பன்னாட் டவரொடும் தென்னா டதனில்
தோன்றக் கிடக்கும் சாந்தமும், அகிலும்,
முத்தும், பவளமும், தத்தும் திரைவழி
நாவாய் தன்னுள் நலம்பெற வமைத்துத்
''திரைகட லோடியுந் திரவியம் தேடு''டெனும்
உரைதனைப் பேணி உவந்தவர் உறைதர,
விசைய நகர்வாழ் வேந்தன் களிற்றின்
விசைமத மடக்கி வீரங் காட்டிடக்
கண்டஅவ் வரசும் களிமிக வுற்றே,
தன்பேர் தன்னொடும் தண்பூங் குடையும்,
அனுமக் கொடியும், பகற்றீ வட்டிலும்,
சிறப்புறப் பெற்றுத் தென்னா டாண்ட
உறைப்புறு இராயத் தொண்டை மன்னனும் ;
நாட்டுதஞ் சையர்க்காய் நாகலா புரத்துப்
பாளையக் காரனைப் பல்திறங் காட்டி
வெற்றிக் கொடிபுனை வீரரகு நாதனும் ;
ஆங்கிலர்க் காக ஆர்க்காட் டரசனின்
பாங்குற விருந்து, பழுதுறு பிராஞ்சியர்
தம்மைமேற் கொள்ளத் தனித்துணை நின்ற,
இம்மைநற் பயனும் செம்மைநூற் பயனும்
தேறிய விஜய ரகுநாதத் தோன்றலும்;
கீழா நிலையரண் சூழுறந் தாங்கிப்
பட்டுக் கோட்டைசூழ் பகர்பல நாட்டை
ஹைதரென்போன் ஆங்கிலர்க் கெதிர்த்து
கைவரக் கொண்ட காலையில், அவனொடு

தீரமும் வீரமும் சிறப்புறக் காட்டி,
மீட்டுமந் நாட்டில் மேவிடா தோட்டிய
சிவானந்த ராய ரகுநாதச் செம்மலும் ;
ஆஞ்சால மிகுந்த பாஞ்சாலங் குறிச்சி
ஊமையன் ஆங்கிலர்க் குறுத்தவெவ் வினைகளைப்
பாங்குட னறிந்து பகையற அவனையே
பிடித்துக் கட்டிப் பீடையை ஒழித்திடுந்
தொண்டையர் சிகாமணி தொல்புக ழுடையகோன் ;
அண்டையி லிருப்பனேல் அஞ்சலுண் டோவென
ஆங்கிலர் தாமே அறிந்தன ராகிக்
கீழா நிலையையும் கீர்த்தியு மளித்துத்
தாழாது தாங்குவ மென்றே சாற்றினர்.
வெந்திறற் போச னிவனெனப் புவியோர்
புகன்றிடு மாற்றம் பொலியும் விசய
ரகுநாதத் தொண்டைமன் நன்மர பதனில்
இராமச் சந்திரன் நற்றவ மிகுந்து
மாநிலம் புரக்க வந்திவண் தோன்றிய
இராஜமார்த் தாண்ட பைரவத் தொண்டைமன்
மேல்நாட் டவருமிக் கீழ்நாட் டவரும்
ஏந்த லிவனே இறைவன், சால்புளன்.
தேசதே சத்துறு சீரெலாம் ஆய்ந்து,
நேசமுட னவற்றை நீடுதன் னாட்டில்
வாசமுற வைத்த வள்ளலோ? வென்னச்
சீரும் சிறப்பும் சேர்ந்தமர் புதுவைக்
கோட்டையர் தமக்கே கோடா நெறியை
நாட்டிநெஞ் சுவந்து, நானில மதனில்

காணுறும் ஒவ்வாக் கசடறத் தாமே
தாணுவாய் நிற்போ மென்றுளங் கொண்டு,
“ முன்பெருங் கிள்ளி முறைகொடு மணந்த
நாகநாட் டரசியின் நன்மா பினரே
தொண்டையர் கால்வழித் தோன்றல்க ளலவோ?
ஆதலின் யாமுமிங் கன்பும், காதலும்,
மீதுறு மாதினைப் பேதற மணப்பேம்”
என்றுதன் மனச்சான் றியக்கிய துறைவழி
பன்னாட் டிடையும் பலகால் திரிந்து
ஒத்தநற் பண்பும் உயர்குடி மாண்பும்
ஒருரு வெடுத்தெனத் தோன்றுமாஸ் திரேலிய
பெருமாட்டி தன்னைப் பீடுற மணந்து
தான்கொண்ட இல்லறம் தழைத்தினி தோங்க
வைத்தனன்! என்னே மாபெருந் தீரம்!
“ தன்மனங் கொண்ட நன்மணம் பெரிதே”
என்றுள மகிழ்ந்திங் கிருக்குங் காலைப்
பலபல மாக்கள் பலபல வாய்ப்புகல்
அறியா உரைதனை, நெறிகொடு சார்ந்திவண்
“வான்மா றினுமெம் வாக்கினை மாற்றோம்,
அறிகநீர் எம்மை அறிக” வென்றுணர்த்தி
உண்மை அறிவினை உணர்ந்திடும் வரையும்,
திண்மையே யுடையோம். தேசசஞ் சாரம்
செய்திவண் வருவோம் தேர்கநீ ரென்று
சென்றதை நோக்குழித் திறைகொள்நல் லரசும்
மன்றமும், ஆட்சியும், பெரிதல வாய்மொழி
பேணும் பைரவத் தொண்டைமன் பகதூர்

காணும் மனத்திடம் கதையிலுங் கேட்டிலோம்.
அத்துணைத் திட்பமும், நுட்பமு மார்ந்தகோன்
எத்துணைத் தியாகியென் றெம்மனோர் சொல்வதோ!
முன்னவ னுடனிருந் தாண்ட முன்னவச்
செம்மலே! யிதுவரை செப்பிய மொழியெலாம்
நீயறி யுண்மையே. நின்னிடம் யாம்காண்
பெற்றியே சிறிது பேசுவம் கேட்டி!
முன்னா ளதனில் தொண்டையர் கோக்கள்
தென்னா டதனில் சேத்திர வாசமாய்ப்
பக்திமே லிட்டால் பரவிய காலத்துத்
தென்காசி தன்னில் சிறப்புற வாழ்ந்த
காசி கண்ட பராக்கிரமன் முன்னால்
செப்புச் சாசனம் ஒன்றினைப் பொறித்து
அறநிலைக் களங்களை ஆங்காங்கு நிறீஇ
தங்கால் வழியரைத் தலங்களில் நாட்டி
வைத்தனர். அவர்வழி வாழையடி யாகத்
தென்னாட்டுத் தொண்டையர் சீருட னிருப்ப,
பின்னவர் தமக்கும் முன்னவர் தமக்கும்
பின்னிய நடைவழி பன்னற் கருமையால்,
வேறு பட்டனர், மெலிந்தனர், நலிந்தனர்.
"பண்டைநன் னாளில் பரவிய கீர்த்தியை
என்றுநா மடைவோம்? எம்துயர் தீர்வோம்?"
என்றுளங் கலங்கியிங் கிருந்திடுங் காலை,
நன்றிதை யறியும் நாயகன் புதுவை
விஜய ரகுநாத வேந்தலே யாமெனக்
கண்டுளம் மகிழ்ந்து காத்திங் கிருப்ப,

நின்வர வறிந்து நின்பா லணுகிக்
குற்று லத்தில் குழுமிநம் குலமுறை
முற்று மெடுத்துநின் முன்னே முறையிடச்
சேயிடத் தன்புகொள் தாயினைப் போன்றிவண்
"வருக வருக!! என் மக்காள் வருக!!நீர்
பெருக இனி நம்மால் பெருங்குடி யாகவே:
நும்மனோர்க் குற்ற துயரது ஒழிமின்:
வம்மின்! வம்மினம் மாநகர் புதுவை:
வளம்பெறக் காண்மின். வாழ்கநுங் கால்வழி.
நலம்பல ஈவோம், நாடுவோர் வருக" வென்
றுக்கினை யருளிய அன்பினை நோக்குழி,
எம்மால் கைமா றேதோ அளித்திடல்.
'எங்குலத் தலைவநீ என்றும் வாழ்கநின்
தன்குடி ஓங்க! நின் றனியர சாட்சியும்
நீடூழி காலம் நிலைத்திவ ணிருக்க!
வாழ்த்துவம்! வாழ்த்துவம்!!" மனமிக மகிழ்ந்தே.

---

# எக்காளம்*

1 தூசுபடிந் தெக்காளம் தூங்குகின்ற தந்தோ!
தொழிலயர்த்த மாருதமும் தொலைந்ததொளி கூர்வாள்
வீசுறும்நம் வீரரெலாம் ஒருங்குறுமின் விரைந்து
விண்பொழுது போக்கன்மின் வியந்தவிந்த நாளில்
தேசுபெறும் நம்கொடியைத் தூக்கியிவண் கொணர்மின்
திருக்கீதம் பாடிடும்நும் சிட்டரொடும் கூடி
மாசுபெறு வண்ணமுந்தம் எக்காள மெடுமின்
வருகயிவண் யாத்ரிகரும் வாழிபெறற் பொருட்டே.

2 ஊனின்றும் உருத்துகின்ற வன்புண்க ளாற்றி
உடையழுக்குக் கறைநீக்கி உவப்பொடுநா னிருக்க
வானின்று சாந்தமுறும் பெருநிலையொன் றாலே
வாய்ப்பதல்லால் வேறொன்றால் வாய்ப்பதிலை கண்டு
நானின்று களைத்திருந்தும் நன்மாலைப் பொழுதில்
நலங்கொளருச் சனைகொண்டு நாதரில்லம் புகுந்தேன்
ஏனென்று கேளாத வகையாய்எக் காளம்
எதிர்ப்பட்ட தென்கண்முன் எடுத்தூதும் விரைந்தே.

3 என்னே! யென் திருவிளக்குத் தீபமிடுங் காலம்
எய்தவில்லை!இன்றொளிதான் எய்தலுண்டோ இலையோ?
என்னே! யென் கண்ணுறங்க இன்மாலைப் பொழுதிங்கே
எய்தவில்லை, ஏனோவென் இளைப்பு மொழியவிலை?
என்னே! யென் புதுமலர்கள் வாடியுலர்ந் தனவே
என்கடனும் பாக்கியமு என்றே நான் கொடுப்பேன்?
என்னே! என் அலைச்சலெல்லாம் தீர்ந்த தன்றோ?
எக்காளம் எதிர்ப்படுதற் கேற்றநாள் இதுவோ?

* ஸ்ரீ ரவீந்திரநாத் டாகூர் எழுதிய 'Trumpet' என்னும் பாட்டுக்களின் கருத்தமைந்தது.

4 தூங்குகின்ற என்மனமே! தூக்கமொழித் தின்றே
துரிதமுற்று எழுந்திருநீ தொல்வலிமை யுடனே
ஓங்குகின்ற தீபவொளி எங்கணுமே வீச
உகந்தென்றன் ஜீவியமும் ஒளிபெற்று விளங்க
ஏங்குகின்ற காலவிருள் இன்றோடே யொழிக
எங்கணும்நல் லுணர்ச்சிபுகுந் தெவ்விருளும் கிழிக்க
பாங்குபெற நானிந்நாள் எக்காளம் எடுத்துப்
பயமொழிக்க வந்துவிட்டேன் பயமொழிமினீரோ.

5 என்னுறக்கம் யாவும்விட்டேன் இன்றோடே இனிமேல்
என்பாதை அப்புகளின் இடையாகும் கண்டீர்
முன்னுறக்கம் உறங்கினர்கள் சிலர்நெளிக்கச் சிலரோ
மூழ்கியபுன் கனுக்கண்டு முக்கிமிக உளற
மன்னுறக்கம் கொள்ளாது சிலர்எம்பால் நெருங்க
மற்றவர்கள் இல்லிருந்து வாய்விட்டுக் கதற
துன்னுறக்''கம் டம்''என்று எக்காளத் தொனிதான்
துளைத்துவிடும் நம்காதை தொனிபட விவ்விரவே.

6 நான்முன்னர் அறியாதே சமம் விரும்பி யிருந்தேன்
நலிவுறநான் கண்டதல்லால் நலமொன்றுங் காணேன்
கான் முன்னர் கடும்பகலில் வெந்தீயால் சுடினும்
கணுக்களற வெட்டுகினும் களைப்பற நின்காளம்
ஏன்முன்னம் எடுத்திலமென் றேங்குகின்றேன் இன்றே
எடுத்தூத விரைந்தனனல் என்னைபுன்பால் கொடுத்தேன்
கோன்முன்னர் நின்றபின்னும் பின்வாங்க மாட்டேன்
கொடுத்திடுக நின்னருளைக் குறையிரந்தே னெனக்கே.

---

# ராஜா ராம் மோகனர் வாழ்த்து



1 கடல்புடை யுடுத்த காசினிதனிலே
கவின்மிக விளங்குமிந் நாட்டில்
உடல்பொருளாவி அனைத்தையும் பாற்கே
உதவிடும் உத்தம சிலர்
மிடல்பெறு மனத்தர், பலபலவினத்தர்
மேவினர் அவர்தமுள் விசேட
அடலுறு பெரியோன் ராஜா ராமோகன்
அவனடி பாவுதும் மகிழ்ந்தே.

2 பலசமயச் சழக்கறுப்பான், பரம்பொருளே
மனமுவந்து பாரில் பெங்கால்
திலகமென ராம்மோகன் தனைப்படைத்து
புவிக்கிந்தான் திறல்கொண் டன்றேன்
நலமுறு சன் மார்க்கமெலாம் தழைத்தோங்க
எந்நாடும் நலம் பெற் றுய்யப்
புலமைமிகும் பிரமமதம் தாபித்தான்
நாமெல்லாம் போற்று மாறே.

3 பத்தியொன்றால் உலகமதின் பாசமெலாம்
விட்டொழியும் பரத்தின் மேவும்
சத்தியென்றே உண்மைமதம் தனைக்கொடுத்தான்
ராம்மோகத் தயாளு நம்மை
முத்திவழி காட்டுவித்த முதறிஞன்
இவன்வழிநாம் முறையே சென்றால்
சித்திபெற்றுப் பரத்தின்பால் ஒன்றாகச்
சேர்ந்திடலாம் செகத்து ளோரே!

4 எங்குமுளன் பராபரனென் ஞோராது
புன்மனத்தோர் ஈ தீதென்று
பங்குபெறப் பிரித்தாய்ந்து பலமதமாம்
படுகுழி வாய்ப்பட் டுழன்றார்
சங்கையற எம்மதமும் சம்மதமாம்
சமரசசன் மார்க்கம் நாடில்
அங்கைநெல்லிக் கனியன்றோ ராம்மோகன்
அளித்தமதம் ஆய்வீர்! ஆய்வீர்!!

5 பெரியார்தம் பணிகோடல் பல்லுயிரும்
தம்முயிர்போல் பெரிதும் பேணல்
உரியாரை ஆதரித்தல் சாந்தமுறல்
உலகிலுறும் உண்மை யாய்தல்
நெறிமேவி வழுவாது மனச்சாந்தி
கொண்டதனில் நிலைத்து நிற்றல்
பொறிவாயில் புகுந்துழலா மதம்பிரம
சமாஜமெனப் புலவீர்! காண்பீர்!!

6 வாழி பேரருள் வாழி நம்மிறை
வாழி இந்திய மகரிஷிக்குழாம்
வாழி நன்னெறி வாழிராம் மோகனர்
வாழி நெல்லைமா நகரச் சமாஜமே.

---

## முதல் மனைவி இறந்தபோது பாடிய

# இரங்கற் பாக்கள்

1 மண்ணமைந்த வீடுகட்டும் சிறுபருவத் திருந்தே
மங்கை நீ மணவாள னெனவே யுற்றாய்
பண்ணமைந்த கீதவொலிக் கருவியா யுனையும்
பாடகனா வெனையுமவர் பாவித்தே வளர்த்தார்
கண்ணமைந்த காரிகையா நீயானாய் நானுங்
காளையா யுனைமணந்து களிப்புற்றிங் கிருந்தேன்
விண்ணமைந்த பரம்பொருளுன் விதியேட்டைக் கிழிக்க
விண்ணேறினாய் நானிங்கு வீணிலலை மறவே.

2 பன்னெடுநாள் வாழ்கவெனப் பெரியரெலாம் நம்மைப்
பட்சமுடன் மணவிழவிற் பரிவாக ஆசிச்
சொன்னெடுகச் சரம்போலப் பெய்தனர் நாம் மகிழ்ந்தோம்
சொற்படியே யாகாது தொன்மைவினைப் பயனால்
பின்னெடு நாள் நீயிருக்க வாற்றாது பிரிந்தாய்
பித்துற்று நான்புலம்பப் பெரியதயை அளித்த
என்னெடுநெஞ் சினிலிருக்கு மிறைவர்திருச் செயலை
என்னென்பேன்! என்னென்பேன்! ஏதுமறி யேனே.

3 உடலுயிரும் பூமணமும் ஒன்றையொன்று பிரிவுற்று
உலகியலில் காண்பதில்லா உண்மை பொய்க்குமாறு
மிடலுறச்சின் னாளிருந்து நீமறைந்தாய் நானோ
மிதமற்ற உடல்போலும் மிதித்த மலர்போலும்
விடலையெனத் திரிகின்றேன் நீயோவின் னகரில்
விளையாட விரைகின்றாய், விருப்பமிது வானால்
கடலுலகில் காதலுரம் வைத்தபெருங் கருணைக்
கடவுளெண்ணம் எவ்வாறும்? கணிக்குமியல் பிலனே.

4 மணக்கின்ற அந்நாளில் ஒருநாளும் உமையே
மறந்துநான் பிரிந்திருக்கேன் மறையோரே சாட்சி
பிணக்குறநீர் நடந்தாலப் பிணக்கதனைக் காதல்
பெருநெகிழ்ச்சிக் குறியாகப் பேணுவனென்றே
இணக்கமுற உரைத்தமொழி தனைமறந்திட் டென்னை
ஏக்கமுறச் செய்தெவணீ ஏகி மறைந் தொளித்தாய்
குணக்குமுதல் நாற்றிசையும் தேடியலைந் தலறக்
கொண்டனையே நின்குறிப்புக் குறிக்குமியல் பிலனே.



## திருவொற்றியூர்

# தியாகேசர் காதல்



1 நானவரை ஒருக்காலுந் தேடாதே யிருந்த
நாளிலென்னை மாலையிட்டு நாட்பார்த்துச் சென்றார்
வானவரைக் காக்கின்றார் என்பொருட்டோ ஒன்றும்
வாக்குரையார்! யார்மயக்கு ளாயினரோ அறியேன்
ஞானவியல் தனையுணர்த்துந் தோழிநீ யவர்பால்
நானுரைத்த நயமெல்லாம் நவின்றுவந்தா லென்றன்
மானமெலா மடங்கியுயர் பெண்களுக்குள் வாழ்வேன்
மறுப்பாயேல்ஒற்றியில்யான் மரிப்பேனென்றுணர்த்தே.

2 ஓரிரவில் கனவில் வந்தார் ஒருபேச்சும் பேசாதே
உண்மையுள்ளார் போலென்னையே உகந்துமுக மணைத்தார்
ஆரிவரென் றுணராதே நாணமுற்றேன் தோழி!
அண்டி நின்று காமவிய லங்கங்கே காட்டி
பாரிதனைப் பாரென்றார் பார்க்க முகமறைத்தார்
பாரியென்றே சொன்னார்போல் பாவித்தேன்பாவி
வாரிதனைத் தலைதரிப்பார் ஒற்றிநகர்வாழ்வார்
வருவாரோ? வாராரோ? வாக்குரையாய் நீயே.

3 மணல்வீடு சட்டிநான் மகிழ்ந்திருக்கும் காலம்
மன்னவன்போல் வந்தெனக்கு மணமாலை இட்டார்
பிணமாரும் சுடுகாட்டில் திரிந்தலைந்து நின்றார்
பேதையேன் நெஞ்சமது புண்ணாகும் வேளை
சணலதனில் தீயிட்ட தன்மையது போலச்
சந்திரனும் கொடும்பாவி தகைக்கின்றா னென்னை
வணமுடைய மயிற்றோகைப் பெண்ணாளங்கே சென்று
வழுத்தாயோ ஒற்றிநகர் வாழ்ந்திருப்பான் தனக்கே.

4. தெருவீதி விளையாடித் திரிந்தலையுங் காலம்
தெய்வரம்பை நானெனவென் சிந்தையுறச் செய்தே
ஒருவழியுங் கண்டிடேன் பாவிமத னாணை
உனையல்லால் ஆதரிப்பார் ஒருவரிலை யென்றே
வருவழிநீ யுரையாதே பெண்ணணங்கே யென்றார்
மறுமொழியொன் றுரையாதே மயக்கமுற்றே னவர்பால்
பெருவெளியில் புகுகின்றார் என்னையிவண் விட்டே
பேதையரோ! ஒற்றிநகர்ப் பெருமானென் தோழி.



# நெல்லை நாயகர் குறம்



1 தத்துவமாம் கொலைவேடர் என்னைவளைந் தன்று
தலைகொய்யும் தருணமதில் தடுத்தாண்ட தகையோர்
எத்துயிர பஞ்சமதில் என்னை விடுத்தேகி எங்குற்றார்?
எங்குற்றார்? ஏங்குகின்றேன் மாதே.
முத்தநகை மின்னார்கள் கிதமுறும் நெல்லை முன்னவனென்
முறையறிந்து முளரித் தாள் தனக்கே
பத்தியுடன் சிவபூசை பண்ணிவைக்கும் நாளென்
பங்கிலுறப் பார்ப்பதுண்டோ? பகுத்துரை நின்குறமே.

2 தெருவதனில் என்னையொத்த சிறுமியரோ டன்று
சிரித்தமணல் விடுகட்டித் திரியுமியல் பறிந்து
கருவதனில் உனைக்கலந்த கண்ணாள னென்று
கைபிடித்தார் நெல்லைநகர்க் கடவுளர்நன் மாதே.
பருவமுற்று அவர்வரவை எதிர்பார்த்து நின்றேன்
பாவிமதவேளும் எனைப் பகைத்துயிரை வதைத்தான்
திருகுமொழி சொல்வாரோ? அன்றி எனைக்கலந்தே
தித்திக்க வைப்பாரோ? தேர்ந்துரை நின்குறமே.

3 அன்னைமடி மீதிருந்து பாலருந்தும்வேளை அயலகத்துச்
சிறுவன்போல் அண்டியெனை யழைத்து
முன்னைவினை தொலைப்பதற் கின்றென்னை மணம்புரிநீ
மறாதே யென்றேயென் முகஞ்சேர்த்தங் கணைத்தார்
பின்னையொன்றும் பேச்சில்லார் நான்வலியச் சென்றே
பேசுகினும் பேசகில்லார் பெருமையுற்றார்
என்னையினிச் செய்வதென்றே ஏங்குகின்றேன் மாதே
இயல்பறிந்தே உரைத்திடுநின் இணையில்லாக் குறமே.

4 காமவியல் சிறிதுமில்லாக் காலமதி லுவந்து
கண்ணாளன் என்னையன்றிக் கலக்காதே யென்றார்
நாமமென்னே என்றவரை நான் விரும்பிக் கேட்டேன்
நாம் நெல்லை நாதரென்றார் நாணக்கை பிடித்தார்
சேமமுறத் தில்லைசென்று வாழ்கின்றா ரென்னே!
தேட்டமுறு காலமதில் தேடியெனை யணையார்
வாமமதில் எனைவைத்து வாழ்விக்குங் காலம்
வருமோ சொல்? வாராதோ? வகுத்துரை நின் குறமே.

---

# அருட் கடன் விண்ணப்பம்



1 தந்தைதாய் பெண்டிர் தனையரோ டெல்லார்
சார்பையும் விட்டன னுன்னைச்
சிந்தையால் ஏத்தித் துதிப்பதே யல்லால்
தேவ! நான் வேறொன்று மறியேன்
நிந்தையே என்னைச் சூழ்ந்திடா வண்ணம்
நீயருள் கொடுத்து நிலத்தில்
எந்தையே! என்ற னிறைவனே! என்னை
ஈண்டுவந் தாள்வதுன் கடனே.

2 பொன்னைமண் உலகைப் போக மங்கையைப்
புந்தியில் மதிக்கிலே னுன்னை
அன்னையி னினிதாய்ப் போற்றினேன் பரமே!
அருள்கொடுத் தாள்வதுன் கடனல்
என்னைநீ விடுதல் நீதியோ? என்னை
எங்ஙனம் விடுதியோ அங்கும்
உன்னையே காணும் உளமெனக் குறுமால்
உள்ளதை ஒழித்திலன் உவந்தே.

3 மூடனா யிருந்த காலத்தி லுவந்தென்
மூர்க்கமே தொலைத்து நின்சீரைப்
பாடவே படிக்கப் படிப்பித்த பொருளே!
பாவியேன் படுந்துயர் கண்டும்
ஆடக மன்றில் நடம்புரி அரசே!
ஆண்டவா! என்றனை யாண்டுன்
வீடக மதனில் வைத்திட வேண்டும்
வேட்கையி தாள்வதுன் கடனே.

4 முன்னமோர் மங்கை மாள்வுறச் செய்தாய்
மூடனேன் பாசவல் வினையால்
என்னவோ வேண்டிக் கதறினேன் என்றன்
எண்ணமோ பலித்ததுங் காணேன்
உன்னையே யன்றி என்னையிங் காளும்
உற்றவர் வேறெவர் உகந்தே
தன்னையும் என்றன் தன்மையும் அறிவோய்
தாழ்த்திடா தாள்வதுன் கடனே.

5 கோபமோ என்னைக் குடிகொண்ட தந்தை
கோட்சொலோ என்றனின் தாயாம்
சாபமோ என்றன் தலைவியர் பொய்ச்
சாட்சியோ என்னுடன் பிறந்தார்
தாபமோ என்றன் தனைய ரெல்லோர்க்கும்
தாழ்ச்சியே என்னுடைச் சார்பு,
சோபமோ என்னைச் சூழ்ந்துற்ற தோழர்
துன்புறுவே னெனை யாளே.

6 பாலனா யிருந்த காலத்தி லுவந்து
பக்தியே பெரிதெனக் காட்டிச்
சீலனா யென்னை யாட்கொண்ட சிவமே!
தெருவினில் விடுதலு மழகோ!
கோலமே யமர்ந்த குணப்பெருங் குன்றே!
குறைவிலா நின்னருட் சீரை
ஆலமே குடித்த கடவுளே! அடியேற்
களிப்பதுன் அருட்கழ காமே.

வேறு

7 சிறுவயதி லென்னைவரிந்து தேட்டமுற்ற பொருளே!
தேவரெலாம் மகிழ்ந்தேத்தத் தெவிட்டுகின்ற உறவே!
பெருவெளியில் நடனமிடும் பேசரிய மணியே!
பேசாத மௌனத்தோர் பெற்றிடும் நற்பேறே!
மருவுருவொன் றில்லாத மாணிக்க மலையே!
மாசற்ற குணத்தோய் நின் மலரடிக்கே யெனது
கருவுருவம் வெகுநாளாய்க் காதலித்த தையா!
கருணைமழை பொழிந்தென்னைக் காப்பதுன்றன் கடனே.

8 பத்திநிலை சிறிதில்லேன் என்றென்னைப் புறத்தே
பாடுறநீ காண்பையெனில் பாசவலைப் பட்டே
முத்திநெறிக் கெதிராகும் புன்மயக்க மெய்தி
மோசமுற முனைந்திடுவேன் மூதறிவோ ருளத்தில்
தித்தியா நின்றாடும் தெய்வ மணிச் சுடரே!
தேவாதி தேவரெலாம் தினந்தொழுமப் பொதுவில்
தத்திதோ மெனவாடும் தனியரசே! கருணைத்
தண்மழையே! தாங்குகவென் தயக்கமொழித் தின்றே.

9 வழக்கறியேன் வகையறியேன் வழிதுறைகள் அறியேன்
வஞ்சமன வசம்நின்று மயக்கமுற அறிவேன்
கிழக்கறியேன் மேற்கறியேன் வடபாலும் தெற்கும்
கீழ்மேலும் நிறைந்த நின்னைக் கிளக்கவறி வேனோ
கழைவனத்துத் திருப்பொதுவில் தனிநடங்கொள் ஐய!
கருணைவழிந் தூறுகின்ற காட்சிதனை விழைந்தே
பழக்கமுறப் பார்க்கின்றேன் நின்னோடே நானும்
பரவுதலு முண்டேயோ பகர்ந்திடுக நீயே.

10 நீயேதான் எனையாள எண்ணுதலும் வேண்டும்
நின்னையல்லா லெனக்குற்றார் நீணிலத் திலாரே
நோயேயும் வாழ்க்கையுற்றால் பெற்றாரே மகனை
நொடிப்பொழுது மகலாது பேணுதலுங் கண்டேன்
நாயேதா னானாலும் சரணடைந்தா லதனை
நாட்டிலுள்ளோர் தள்ளாரே நானொருவன் உதவாச்
சேயேயென் றெண்ணாதே அருட்சோதி காட்டித்
தித்திக்க வைத்திடுநின் திருவடிசார்ந் தேனே.

11 அடிசார்ந்தேன் அடிபிடித்தே அனலுருவாம் நின்னை
அகிலவுல கெங்கணு நான் அமைதியொடு காணும்
படிசார்ந்தேன் அல்லேனெப் படியுமுன தருளால்
பலிப்பதல்லால் என்னாலெப் படிகடக்க வியலும்
பிடிசார்ந்தேன் என்றென்னைப் புறம்விட்டா லந்தோ!
வினைவழியே புகுந்துழல்வேன் வேறுவகை யறியேன்
மடிசார்ந்த பிள்ளையினைத் தாயணைத்தல் போல
மகனேயென் றெனையணைத்து மகிழமுத மூட்டே.

12 வாடாதபுது மலர்கொண் டுன்னன்பர் நின்னை
வாயார வாழ்த்துகின்றார் வஞ்சமிக வுடையேன்
கோடாத மாதர்தனக் கும்பமிசை மனத்தைக்
கொள்ளைகொள விட்டுலகில் கூத்தாடி நின்றேன்
ஏடா! நீ, செயுங்குற்றம் தீதென்றே யுணர்த்தி
என்னையிங்கே கண்டிப்பார் எவருமிலை கண்டேன்
வாடா!வென் மகனே!யென் றணைத்துவக்குந் தாயாம்
வள்ளல்நின்னை லன்றியெனை வாழ்விப்பார் யாரே.

---

# ஆட்கொண்ட பதிகம்



1 மருளூறமென் சிறுவயதி லென்னிடத்தே வலிந்து
மகிழ்மாலை தனைச்சூட்டி மற்றொருவர் ஓரா
திருள்மூடும் வன்மாய விளக்கமெலா மெனக்கே
இசைவுறப்பொய் யெனக்காட்டி இணைவித்த தன்றி
அருளெல்லாம் ஓர்உருவாய் நிற்பதுவே யுன்றன்
அந்தரங்க முடிவெனவென் னந்தரங்கந் தன்னில்
பொருளல்லாப் பொருள்காட்டி ஆண்டுகொண்ட குருவே!
பொன்னடிக்கே எழையன்பு பூணுவேன் நிதமே.

2 புலைப்பட்ட நெஞ்சகத்தோ டுறவல்லார் உறவைப்
பொருளாக மதித்திருந்த போதென்னை வலிந்து
வலைப்பட்ட மானெனநீ மயங்கேலென் மகனே!
வா! இந்தா! மகிழ்மாலை மயக்கமறச் சூட்டெடன்
நிலைக்கமைந்த குணங்கொண்டாய் நீயொருவ னன்றி
நீணிலத்து வேறொருவர் கேடிலோ மென்று
கலைக்கமைந்த குழிகாட்டி ஆண்டுகொண்ட குருவேநின்
கருணைமலர் பதமேழை கருதுவே னிதமே.

3 நவநேய மில்லாது காண்பவையா முலகச்
சடப்பொருளில் அவாவுற்றுத் தயங்கும்போ தென்னை
இவனேயம் எமக்காமென் றெனைப்பிடித்து வலிந்தே
இணையறுநன் மகிழ்மாலை என்றனக்கே சூட்டி
சிவநேய மாண்பரென்றன் திறம்கண்டு திகைக்க
தித்தித்தென் உளங்கலந்த தேனே!சற் குருவே!
நவநேய மன்றேநீ! யுன்கடமை செய்தாய்
நாயேயாய் நிற்கவைத்த நலன்நினைந்து நடித்தே.

4 என்னையொரு பொருட்டாக நானுறங்கு மிரவில்
இணையடிகள் வருந்திடவென் இல்லத்தே புகுந்து
முன்னைவினை தொலைத்தொழிக வென்றேயென் கரத்தில்
முகிழ்மாலை கொடுத்தருளும் முறைமையென்ன புகல்வேன்
மின்னையொளிர் கங்கைதனைச் சடைமுடியிற் றரித்தோய்
மேனியெல்லாம் வெண்பொடியின் விளக்கமுற நின்றோய்
பின்னையினி மாயையெனச் சூழாதே ஒழித்தோய்
பெரும!நின் திறமறிந்து பேசுமியல் பிலனே.

5 என்னையாள்வே னெனமுன் னென்கனவில் வந்து
எண்ணமெலாம் நின்னருட்கே எண்ணமுறச் செய்தாய்
உன்னையன்றி யென்னுளத்தி லொருவரிலை கண்டாய்
உனையறியும் பக்குவத்தே உயிர்ப்புடனு னிருக்க
பொன்னையுங்கல் மண்ணையுமே நான்மதிக்க மாட்டேன்
போகமுநான் வேண்டுகிலேன் போதமுற வென்னை
மன்னவநீ குறையும்வந் தாட்கொள்ள வேண்டும்
மன்றில்நடம் புரிந்தென்னை யாண்டுகொண்ட துரையே.

6 சிறுவனிவ னென்றென்னை விட்டுவிட்டார் சிலரே
சிறுமையெல்லாம் தொலைத்தென்னைத் தேவநின் கழற்கண்
உறுவனென் உகந்தன்றே ஆட்கொண்டாய் நீயே
உன்னடிக்கீழ்ப் பலநாளாய் உய்ந்திருந்தே னெனினும்
பருவமுறு காலமதில் நெற்பயிர்க்குத் தண்ணீர்
பாய்ச்சுதல்போல் பாலனேன் பவமெல்லாம் தொலைத்துப்
பெருவெளியின் நிலைகாட்டி நின்னடிக்கே கூட்டிப்
பிறவியற்றோர் வாழ்ந்திடுமப் பேரொளியைக் காட்டே.

7 கருவுருவாய் நான்செனித்த போதென்னை யுவந்துன்
கழலடிக்குத் தொண்ட னென்று கைக்கொண்ட சிவமே!
திருவுருவத் தியானமே தினங்கொண்டே னெனினும்
தேவே! நின் னருளமுதம் தேக்குதற்கே வாடி.
பெருமிதக்கண் ணீர்சொரிந்தேன் எக்காலும் ஐயா!
பேசாத மௌனமுறு பெரியார்தம் முளத்தே
மருவுருவம் தோற்றாது தான்தானாய் நின்ற
மாமணியே! குருமணியே! மாநடத்து மணியே!

வேறு

8 கருதாத புன்மயக்க மெய்தி நாளும்
காரிகையார் கண்வலையிற் கடைப் பட்டேனை
விருதாவென் றிகழாதே விரைந்து வந்து
வேட்கையறத் திருவருளை வினையேற் கீந்தாய்
பெறுதாயும் இங்ஙனமிச் சேயேன் றன்பால்
பேரிதுவக்காள் பெருங்கருணைப் பெம்மான் நின்போல்
உறுதாயார்? தந்தையார்? உறவு தானார்?
உண்மையிதை இன்றறிந்தேன் உவப்பு மிக்கே.

9 திகைப்பெலா மென்றன் சிறுமதி யென்றே
தினம்தினம் நியறி வுறுத்தி
நகைப்புற நின்றாய் அதனையோ ராதே
நானெனும் தன்மையில் நலிந்து
மிகைப்புற்றேன் வினை விழலிட்ட மெழுகாய்
வெந்துநைந் துருகிடக் கண்ட
புகைத்தலும் தீர்ந்து அனலுரு வாக்கும்
பெற்றிநின் புன்னகை பெரும!

10 பெருமையும் நலிவும் பேறுற விருக்கும்
பேறெலாம் என்மனப் பேய்தான்
கருமமாய்க் கொண்டு நிதமகிழ்ந் துழன்று
காலத்தைக் கடத்திடக் கண்டேன்
வருபய னறியேன் வள்ளலே! யென்னை
வாழ்வித்தல் நின்கட னன்றோ
குருவும் நற்றாயும் தந்தையும் நீயே!
குறைதவிர் குடிலனுக் கின்றே.

11 கொடிபிடித் துயர்ந்த கோக்களும் மற்றும்
குவலயத் தோர்களும் நின்றன்
அடிபிடித் தன்றி வாழ்வதிங் கறியேன்
அவரவர் வினைவழி யவரை
மடிபிடித் தாட்டும் வள்ளலே! கருணை
வழக்கினில் இதுஒரு வழக்காம்
படிபிடித் தேறு தெப்படி மேடை
பார்ப்பது பயன்கொளப் பணித்தே.

12 பணிந்தன னின்னை என்னையா ளுடையாய்!
பன்னெடுங் காலமிப் பாழாம்
பிணிபெறு முலகக் கட்டிலே யுழன்று
பேதையாய்த் திரிந்தன னென்னை
மணிபெறும் நின்றன் காட்சியைக் காட்டி
மயக்கற மகிழ்வித்தாய் இன்றே
திணிபெறப் பின்னும் திடமுற வேண்டி
சிறியனேன் திகைப்பொழி நீயே.

---

# தனி நிலைக் கவிகள்

# (SONNETS)

## 1. கடவுள்

தோற்றப் பொருளைத் துணைபெறு மக்கள்
மாற்ற முறுபொரு ளளவை நோக்காது
கால் நீ ரனல் பூ வெளியெனக் கணித்தனர் —நீதான்
மேலாய் நின்று மேவுறல் கண்டிலர்.
கண்ட பொருளிற் கணிப்பவ ரன்றிக்
காணாப் பொருளைக் காணுதற் கரியார்.
எப்பொருள் தனிலும் இயங்குறும் நின்னைத்
தப்பறக் கொள்பவர் தாமறி வுடையோர் —நீயோ!
நானெனும் அகந்தை நாட்டினை யல்லை!
அதுவெனும் பெயருள் அணுகினை யல்லை!
வானெனும் தலத்தில் வசிப்பவ னல்லை!
வாங்குதல் கொடுத்தல் வழக்கினை யல்லை!
நீயே யாவுமாய் நின்றவன் அன்றோ?
நின்னோ டொப்புமை நீணிலத் துண்டோ?
தாயே யாவாய் தந்தையு மாவாய்
தாரமும், பொருளும், யாவுமே யாவாய்.
நாயேன் துதிபுனை நவிலுமா றெங்ஙன்?
நானோ அறிவிலி! நீயோ அறிவுளை!
வாயே வாழ்த்துக! மனமே மகிழ்க!
வள்ளல்நின் திருவுளம், வைத்தவா றுறுகவே.

## 2. உலகம்

உறுபொரு ளெவையும் உள்ளகத் தடக்கிக்
கருவுரு வாக்கும் கண்ணகன் உலகே !
நின்வயின் உதித்து நின்வயின் ஒடுங்கும்
பன்முறைப் பிறப்பும் பன்முறை யிறப்பும்
தோன்றின கெடுதலும் தோன்ற உறுதலும்
காண்பவர் மயக்கோ ? காரண முளதோ ?
நீயே பலவாய் நிறைந்துநின் றனையோ ?
நின்னிடத் தொருவன் நிரம்பியுள் ளனோ ?
நீயிலா தவனும் அவனன்றி நீயும்
தனித்தொரு முதலாய்த் தங்கல் கண்டிலனே—அதனால்
எண்ணரும் உலகத் தியற்கை யாவும்
முன்னாட் டொடங்கி இந்நாள் வரையும்
நண்ணரும் வெளியில் நலிதலும் தோன்றலும்
முறையே நடப்பன முடிவொன் றின்றி.
எப்பொரு ளாய்நீ இசைந்துருக் கொளினும்
அப்பொருள் தனிலும் அவனன்றி அசையும்
முதன்மை நினக்கே முற்றுமா றில்லை.
காரண காரியம் இரண்டையுங் கடந்த
ஆரணம் அலறும் அருள்பொழி யண்ணல்
வைத்தவா றென்றும் வாழிய நீயே.

---

## 3. மனிதன்

மண்ணிடைப் பொருளின் மாண்புடை யுருவினாய்!
எண்ணியாங் கியற்றும் இயல்புமிக் குள்ளோய்!
காதற் கடலிடைக் கலங்குமென் கலம்நீ!
சாதல் பிறத்தல் சுழக்கிடைச் சுழல்வோய்!
நின்னுள் உலகில் நிலைபெறும் வரையும்
இன்புறுங் காலைத் துன்பினை நினையாய்.
துன்புறுங் காலை இன்பிற் கழுங்குவை.
உண்ணலும் உறங்கலும் உவத்தலும் அன்றி
எண்ணரும் வினையினை எண்ணியுள் உருகுவை
—அதா அன்று
வலியவர்க் கடங்குவை எளியரை வருத்துவை
நலிவுறுங் காலை நயம்பட நடிப்பை
என்னே நின்மதி! என்னே நின்கதி!!
மன்னே எனினும் மகிழ்நிலை யின்றால் —மனுவே
கலங்கலை. என்றும் கண்ணி ருகுத்து
நலங்கொளு மின்பம் நண்ணுதல் வேண்டின்
மலைவுறு தெதையும் மயக்கறத் தெளிந்து
அங்ஙனே அங்ஙனே அமையுமா றற்று
செய்க செயலினை செயல்பலன் கருதாது
உய்க தினமுகந் துள்ளவா றுருக
நிலையுறு பேறு நிச்சயம் நினக்கே.

---

## 4. பெண்

மென்மை யுருக்கொளும் மெல்லியல் அணங்கே!
நன்மை யுருக்கொள நாட்டுபூ வைப்பே!
ஆடவர் தம்மை அருள்வழி புகுப்போய்!
காடு அகமாகக் கவின்பெறச் செய்வோய்!
நூம்குழாம் உலகில் இல்லென ஒழியின்
யாதும் பாழே! யாதிவண் நடக்கும்?
"அன்பும் அறனும் உடைய தாமில்
பண்பும் பயனும் பயப்பதன்றே" —அதனால் நீ
இயற்கையில் பொருந்திய இரக்க மிக்குளாய்
செயற்கையில் நினையலாற் செயலொன்று மன்றே.
பெண்ணெனில் பேயெனப் பிதற்றிடும் மாந்தர்
கண்ணிலா ரென்றே கழறுதற் குரியார்.
ஆணும் பெண்ணும் அமைந்த இவ்வுலகில்
ஆணின்றிப் பெண்ணும் பெண்ணின்றி ஆணும்
வாழ்க்கை யுறுவது வன்மையே மிகுக்கும் —அதனால்
மனுக்குலம் விளங்க வாழிய! நீயே!
காத லன்புடைக் கணவனைத் தொழுது
என்றும் அவனுரைக் கிதமே பேசிப்
பொன்றுத லிலாத பொறுமை கொள்வாயேல்
வானிடை நினக்கிடம் வழங்க வாழ்வையே!

---

## 5. குழவி

நன்றையும் தீதையும் நாடிடா உளத்தோய்!
மன்றையும் காட்டையும் மகிழ்வொடு மதிப்போய்!
காதலர் அன்பின் கனியெனத் திகழ்வோய்!
போதம் பெறப்பெறப் பொருட்டிறம் அறிவோய்!
உலகில் நம்காட்சி இலையெனக் காணின்
அன்புமுண் டாங்கொல்! அறம்பர வுங்கொல்!
முற்றுந் துறந்த முனிவரும் நம்பால்
பற்றுத லுடையரால் பாகதி நீவிர்கொல்?
நம்முரை யாழின் இன்னிசை மிகுப்பக்
காணவா தனைகளைக் கட்டோ டழிப்பதால் —நீவிர்
பரமே யாவிர் — பாழ்மனத் துயரம்
அணுகுத லின்றால் ஐயோ! நீர்முன்
பிறந்த பொழுது உடன்பிறந் தனவாம்
இயற்கைப் பற்றை என்றும் போற்றுமின் —விணில்
கண்டன கொண்டு கொண்டன விடாது
எவற்றிலும் பற்றுதல் இன்னே ஒழிமின்.
தாயி னன்பின் தன்மையை நினைந்து
மர்க்கட நியாய வழியே பிடித்து
அருளே மலிந்து மருளே மெலியப்
பற்றுக பற்றுக பற்றற் றானையே.

---

## ६. கல்வி

மக்கள் உயிர்க்குநன் மார்க்கம் கற் பிப்போய் !
சக்கிரி தமையும் தனியர சாள்வோய் !
பக்கிரி எனினும் நின் பதத்துணை பிடிப்பனேல்
சிரோ மணியெனத் திருமுடி புதுப்போய் !
பண்டையோர் மொழியைப்பகரும் தூதோய்! -நின்னைக்
கிண்டவும் கிளறவும் அண்டையி லிருந்தே
மேலும் மேலுநின் மெய்யுணர் மார்க்கம்,
காட்டி மகிழ்ச்சியே காணி யாட்சியாய்,
என்றும் ஈகுவை ! என்னே நின்திறம் !
அளப்பரும் புதையல் அண்மி யிருப்பபோல்,
உளப்பெரும் மகிழ்ச்சியும், உலகின் காட்சியும்,
நகைமுகங் கொண்டு நண்ண வைப்பவா !
நின்னுற வாடார் — பொன்னுற வாடார் —நீயோ
பொன்னையும் புவியையும் போகமா தரையும்
போற்றுவை ஒருக்கால் — போத மிகுந்து
மாற்றுவ னென்று மறுப்பை ஒருக்கால் —அதனல்
நீயே தெரிந்த நன் னிலையில் எம்மை,
தாயே அனையாய் ! தவற விடாது
என்றும் காத்தருள் இறைவ ! நின்னையே !
அண்டி நிற்கும்இவ் அறிவி லானையே !

---

# 7. பரிதி

ஆதியாய் உலகின் அன்னையாய்த் திகழ்வோய்!
சோதியாய் எவையும் துலங்கக் காட்டுவோய்!—நீதான்
வானிடை நின்று வழங்குவை வானையும்
கானிடை நின்று கக்குவை தீயையும்
ஊனிடை நின்று உகுப்பை மண்ணையும்
எங்கணும் நிறைந்து ஏகுவை காற்றையும்
பங்கமில் ஐந்து பூதமும் பகுப்பும்
உன்னிடத் துதித்து உன்னிடத் தொடுங்கும்—அதனால்
பன்முக உலகும் பல்பொருள் பொலிவும்
நின்னருள் இலதேல், எங்ஙனம் உயிர்க்கும் —உலகை
ஆட்டுவிப் பானும் அடக்குவிப் பானும்
மூட்டுவிப் பானும் முயல்விப் பானும்
காட்டுவிப் பானும் கடையில் நல்வழி
கூட்டுவிப் பானும் நீ யெனக் குறித்து
மயங்குவர் மக்கள். அவர் மயக்கொழித்து
நீயே அறியா நிலைமைத் தொருமுதல்
தாயே அனைய தண்ணரு ளாலே
ஆய இவ்வுலகும் அண்டகோ ளமுமெனச்
சாற்றுக! நின்னுள் சுவிப்புறுச் சோதியால்
ஏற்றுக அண்ணலை எந்த நாளுமே!

---

# பகவத்கீதை அகவல்



## அத்தியாயம் III—கர்மயோகம்

அர்ஜுனன் :

செய்கையிற் சிறந்தது ஞானமே யென்று
திடமுறச் சொல்லும் ஜனார்த்தனா! நீயேன்
அல்லல் விளைக்குமிவ் வமர்செயச் சொற்றனை ?
அதனால் மயங்கினேன் அறுதியிட் டெதுநலம்
சொல்லுக கேசவ! ஒருசொலால் எனக்கே.

ஸ்ரீபகவான் :

உலகினர்க் கிருவித நிஷ்டை எனால்முனம்
உணர்த்தப் பட்டது. உண்மைகண் டுவத்தலும்,
தன்னயம் விரும்பா சத்கருமஞ் செய்தலும்,
தொழில்செயல் வேண்டேன், தொடங்குவன் ஞானமே
என்னும் மனிதன் ஈடேறும் வழியிலை.
அவன் கணப்பொழுதும் அசையே னென்றல்
பேதைமை யன்றோ? ஞானிபோல் நடித்தே
தன்குண மறாது தன்னுளே பலவெணம்
எண்ணிப் புண்ணாவன், இவனோ கபடன்.
இச்சை வழிசெலும் இந்திரியச் சேட்டைகள்
துச்சமென் றடக்கித் தொழில்செய்வோன் தீரன்.
வரும்வினை யாற்றி வாழ்க. நீவாழா திருத்தலோ
உன்னாலியலா. உடம்போ டுயிர் கெடும்.
ஆதலால் பார்த்தா! ஆசைவிட் டேச்செயல்
செய்யினும் பரத்ததே. தேர்கநீ உணர்ந்தே.

உன்னிடம் உளபொருள் உவப்பொடு வேள்வியில்
ஆகுதி செய்து ஆதுலர்க் கீவையேல்
தெய்வமு முன்னைத் தேடிப் பல்வளம்
ஈயும். ஈதறிதி! இறையுங் கொடாமல்
தன்னயம் விரும்பித் தாணியில் பொருளெலாம்
சேர்க்கநீ விழைவையேல் சோரனே யாவாய்.
தன்பொருட் டன்றித் தெய்வம் ஆதுலர்
தமக்கிந்து வாழ்வோன் தனைப்பவம் அணுகா.
உணவால் உயிர்களும் உடல்களும் சமைவன.
உணவோ மழையில் உறுவது. மழையோ
தெய்வ வேள்வியிற் செழிப்பது. வேள்வியால்
எங்கும் நிறைபொருள் ஏகி நிற்பது.
இவ்வணம் சுழலும் ஏகவட் டத்தை
உணரான் பாபி. உழல்வான் புலன்களில்.
தன்னிலே இன்பமும் திருப்தியும் மகிழ்வும்
தான்கொண்டோன் தனக்கோ தாணியில் செயலிலை.
செய்கையாற் பயனும் இன்மையால் இன்மையும்
சேரா அவனை. சேர்ந்துயிர் பயன்கொளான்.
ஆதலால் நீயும் அவாவறு தொழில்செயின்
பரத்தோ டொன்றிப் பரத்தையே அடைவாய்.
ஜனகன் முதலோர் சாந்தசித் சுத்தியாய்
செய்தது போலச் செய்திரு செயல்களை.
அறிவோன் செய்வதே அறமாம், அதனையே
மக்களுஞ் செய்து மகிழ்ந்துயிர் வாழ்வர்.
எவ்வுல கதிலும் எனக்கெனக் கடமையும்
பயனுமின்றே. பார்த்த! நான் தொழில்செயக்
கண்டனை மற்றவர் கடமைசெய் திருக்கவே.
சோம்பலால் நானும் தொழில்செயா திருப்பனேல்
உலகோர் உழல்வர், உயிரெலாம் மாயும்.

அறிவிலான் செய்தொழில் அவன்பயன் பெறவே;
அறிவோன் செய்தொழில் அகிலம் மகிழவே.
அறிவிலார் தமையும் அறிவோன் போற்றி
செய்க செயலின் திறத்தவர் ஒழுகவே.
இந்திரிய வியற்கையால் இயங்கும் செயல்களை
தான்அகங் கொண்டோன் தான்செய்தே னென்பான்.
முக்குண வசத்தால் முயலும் செயல்களைத்
தக்க உண்மையால் தானறி ஞானியும்
சிற்றறி வுடையோர் செய்வதற் கிரங்கி
பற்றுத லிலாமல் பார்த்துள மகிழ்வான்
எச்செயல் செயினும் எனக்கர்ப் பணஞ்செய்.
பற்றும் பாசமும் தீர்ந்திவண் போர்செய்.
எவனிதை உணர்ந்து எதன்வழி நடப்பினும்
அவனைப் பந்தம் அணுகா. அவன் உணரானேல்
மூடனே. பொறுமையால் முற்றுங் கெடுவன்
உண்மைகாண் ஞானியும் உலகிய லறிந்து
அண்மையில் உயிர்செயல் அடைவை அடக்கான்
தன்னிந் திரிய தட்பும் வெப்பமும்
தன்னுளே அடக்கித் தடைநின் றேகுவான்.
பிறர்தொழில் தனிலும் தன்தொழில் விசேடமாம்;
பிறரதால் பயமாம்; தன்னதால் சிறப்பாம்.

அர்ஜுனன் :

விரும்பா திருக்கவும் விழையும்பல் பவங்களேன்
விரும்பி வருவது விருஷ்ணிநீ விளக்குக.

ஸ்ரீபகவான் :

விருப்பமும் சினமும் ரஜோகுண விழைவாம்.
விலக்குக பாபமும் குரோதமும் தெளிந்தே.

புகையால் தீயும், அழுக்கால் பளிங்கும்
புரையால் குளவியும் புலன்படா வாறுபோல்
ஆசைப் பெருந்தீ அவியாது நின்றே
ஞானியின் மனத்தை நலிவுறச் செய்யும்.
மனமும் புத்தியும் இந்திரி யங்களும்
மனிதனின் பகையாய் மயக்கியே கெடுக்கும்.
ஆதலால் பார்த்தா! அவைகளை அடக்கி,
ஞானவிக் ஞானம் நாடிநீ நடப்பாய்.
தேகாதி களிலே சிறந்தவிந் திரியங்கள்,
அவற்றி லுயர்ந்தது அவனவன் மனமே,
மனத்தி லுயர்ந்தது மயக்கற்ற அறிவே.
அறிவில் சிறப்புடை ஆன்மா அன்றோ!
இங்ஙனம் உணர்ந்துன் சங்கையாம் விருப்பைப்
பங்கப் படுத்திப் பாரிலெத் தொழிலும்
செய்கநீ பார்த்தா செப்பினேன் கர்ம
யோக உள்ளுறையை உனக்கு நானின்றே.

ஓம். தத் சத்.



# பிரம முக்தம்



1 பொருளெனிற் சத்த சத்தாய்ப்
பொலிந்திடும் பொருளொன் றல்லால்
மருள்விழி மயக்காற் பேதம்
மலிந்ததென் றுன்னித் தம்முள்
இருள்கெடக் கண்டே யெங்கும்
இலங்கியுள் மகிழு முத்தர்
அருள்மொழி யதனைப் பேணி
அறையுமிப் பிரம முக்தம்.

2 பிரமமே யல்லால் வேறு
பிறப்பிடம் பொருளுக் கில்லை
சிரமமே யல்லால் வேறாய்த்
தெளிந்திட லென்று தேறிக்
கிரமமே யவற்றின் பால்நாம்
கிளர்தலே யுறுதிப் பேறும்
வரமதே தம்முட் காட்டி
மாண்புறும் பிரம முக்தம்.

3 எங்குமாம் பிரம மென்றால்
எண்ணுதற் கரிதே யென்னும்
சங்கையுற் றெனை யுசாவும்
சீடனே! சாற்றக் கேளாய்!
இங்குநின் னிருப்பு மென்றன்
இருப்புநந் தம்மைச் சார்ந்த
பொங்குபல் பொருளி ருப்பும்
புந்தியா லுணர்ந்தே யன்றோ?

4 நீயுநின் விருப்பும் முன்னல்
நேர்பட நோக்கில் நீதான்
ஆயுநின் சடங்கொண் டன்றோ
அறைகுவை சடமு முன்றன்
தாயொடு தந்தை சேர்ந்தே
சமைந்தவை உணர்வாய் மேற்காண்
வியுமிச் சடம தென்றும்
விளம்புவாய் நீதான் யாரே?

5 சடமுடைப் பொருள்க ளெல்லாந்
தங்கிநின் றழியுந் தன்மை
திடமுறக் காண்பாய் நீயார்
தெளிந்திலை உனக்கு வாய்த்த
மடமுடை மனத்தால் இங்ஙன்
மயங்கினை மயக்கந் தீர்ப்பான்
கடமுடை ஆகா யம்போற்
கலந்தெங்கும் விளங்கிப் பாரே.

6 பொருளெலாம் நாம ரூபப்
பொலிவுகொண் டமைவ தல்லால்
பொருளலாப் பொருள் உண்டென்று
புன்கணுற் காண ஒண்ணுப்
பொருளெலாம் பஞ்ச பூதப்
புணர்ப்பினுல் அமைந்த வென்னும்
பொருளறி அறிஞர் சொல்லைப்
புந்தியா லுணர்ந்து நோக்கே.

7 மண்முதல் ஐந்து பூத
மரபினைத் தெளிந்து நோக்கின்
விண்முத லிருந்து காற்று
வீசிடும் அதன்பின் தேயு
உண்முதல் பொருந்தித் தோன்றும்
ஊறும்நன் னீரும் பின்னால்
கண்முனம் நின்றிங் கோடும்
காட்சியில் தடிக்கும் மண்ணே.

8 ஆய்ந்தவிப் பஞ்ச பூத
அமைப்பிலே தடித்த மண்ணுள்
பாய்ந்திடும் மற்றை நான்கும்
பல்பகுப் புடைய வாகித்
தோய்ந்திடப் பொருள்கள் தோன்றும்
தொன்மையை உற்று நோக்கின்
மாய்ந்தொழிந் தவற்றின் கூறாய்
மண்முதல் விண்ணிற் சாரும்.

9 மண்ணினைக் கண்ணாற் கையால்
வாயினால் மூக்கி னாலும்
தண்ணிய நீர்தொட் டுண்டு
தகவுறக் காண்ட லாலும்
திண்ணிய தேயு தன்னைச்
சேர்ஒளி உணர்ச்சி யாலும்
அண்ணிய பரிசத் தாலும்
அடைகுவர் காற்றை மண்ணோர்.

10 பூதநற் பொலிவால் வந்த
பொருளெலாம் பூத லத்தில்
ஆதர வெதனைக் கொண்டிங்
கமைந்ததென் றுணர்வா யாயின்
பேதமற் றகண்ட போதம்
பிறங்கிடப் புணர்ப்பான் தன்னுள்
நாத தத்துவத்தில் நின்றே
நடித்திடும் நடர்கள் போலாம்.

11 ஆட்டுவான் கையில் நின்றிங்
காடுபம் பரம்போற் சீவர்
ஊட்டுவான் றன்னை நோக்கி
உவந்தினி திருப்பர் பின்னும்
மூட்டுமெவ் வினைவந் தாலும்
முன்னவன் அருளென் றுன்னி
நாட்டிய அகில பேதம்
நாடிடார் நடர்க ளானோர்.

12 தூலமும் ஒழிந்து போகும்
சூக்குமம் ஒடுங்கிக் காணும்
ஞாலமும் மறைந்து வீயும்
ஞாயிறு மடங்கிப் போவான்
கோலவொண் பொருள்க ளெல்லாம்
கூத்தினை நடத்தும் சித்தம்
மூலநற் சத்தி தன்னை
முயங்கிடா திருப்பா னேல்.

# தியானச் சிந்தனைகள்

## 1. உண்மைப் பொருள்

மனமே! நீ உண்மையில் நிலைத்திருக்க விரும்புகிறாயா? உண்மை இன்னதென்பதையும், உண்மைக்கு உறைவிடம் இன்னதென்பதையும் முதலில் அறிவாயா? நீ கண்கூடாய்க் கண்ட பொருளையும், காதாரக்கேட்ட சொல்லையுமே, உண்மை என்று மயங்குகின்றாய். காணும் பொருட்களெவை யும் அழியுந் தன்மையனவேயாம். நல்லனவும், தீயனவு மான சப்தங்கள் உன்னைத் தாக்கின காலத்தில், நீ நல்லன வாய்க்கொள்ளின், உனக்கு நன்மையையும்; தீயனவாய்க் கொள்ளின் தீமையையும் பயப்பனவாயினவே! அதனால் சப்தமாத்திரையான சொற்களெல்லாம் உன் மனநிலைக்குத் தக்கவாறன்றோ ஆயின! காட்சியின்பம் எவ்வளவு குதூ கலத்தைக் கொடுக்கிறது! காட்சியில் சம்பந்தப்பட்ட ஒவ் வொரு பொருளையும் பிரித்துத் தனித்து நோக்கினால் அவ் வளவு சந்தோஷத்தைக் காணோமே! பிரிவற்று, ஏக உருவாய், எங்கும் நிறைந்ததாய், எல்லாம் வல்லதாய் உள்ள ஒரு பொருளன்றோ அக்காட்சியில் சம்பந்தித்திருந்தது! அது அங் குள்ள வரையும் ரமணீய காட்சியைக் கண்டாய். அதனைத் தனிப் பிரித்து உன் மனத்தில் பாகுபடுத்தினாய். அதனால் உனக்கும் பாகுபாடு வந்தது. கீத ஒலியைக் கேட்ட மாத்திரத்தில் எவ்வளவு பரவசப்படுகின்றாய்! நீ மாத்தி ரமா? அறியாப் பருவத்துச் சிறாரும், விலங்கினங்களும், புள்ளினங்களும், தாவரங்களுங் கூட சப்த மாத்திரை யான நாத ஒலியைக் கேட்ட மாத்திரத்தில் தம்மை அறி யாதே ஆனந்திக்கின்றனவே! சப்த மாத்திரையான

ஒலித்திரளைப் பிரித்து ஒவ்வோர் சுரமாக நீ கணக்கிட்டுக் காண்பாயானால், யாதொரு ஆனந்தமும் ஜனிக்கக் காணோமே! வெறும் வார்த்தையாக வன்றோ முடிகிறது! கீத ஒலியில் உள் நின்று ஆட்சி செய்துகொண்டிருந்த ஒரு பொருளை நீ அறியாது பாகுபடுத்திக் கண்டாய். அப்பொருளின் விசேடத்தாலேயே கீத ஒலி சோபிதப் பட்டதை அறிந்தாயில்லை. எந்தப் பொருளானது காட்சி அனுமானத்தாலும், சொல்லுஞ் சொற்களாலும் கரைகாணக் கூடாததாய், அனுமானப் பொருட்களும், காட்சிப் பொருட்களும் நசிக்குங் காலத்திலும் நசிக்காததாய், என்றும், எவ்விடத்தும் உள்ளதாய், எப்பொருளிலும் தன்னரசு உடையதாய் உள்ளதோ, அது ஒன்றே உண்மையான பரம் பொருள். அவ்வுண்மைப் பொருளை மனமே! நீ இங்குங் காண்கின்றாய், அங்குங் காண்கின்றாய்; எங்குங் காண்கின்றாய். அவ்வொரு தனிப் பொருளே, உன்னையும், என்னையும், உலகம் யாவையும் தன்னுள் அடக்கிய தனிப் பொருள். ஆனதால் மனமே! உண்மைக்கெல்லாம் உறைவிடமாய், யுகாந்த காலந்தொட்டுத் தோன்றும் பொருட்கள் எவற்றிலும், சூட்சுமானு சூட்சியாய் அமைந்து நிற்கும் உண்மைப் பொருளோடு அவ்வுண்மைப் பொருளில் அமைந்த நீயும், உண்மையோடு உறவாடி நில். அவ்வுண்மைத் தனிப் பொருளும் உன்னைத் தன்னில் நிலைத்திருக்கச் செய்யும்.

ஓம். தத் ஸத்.

---

# 2. சித்திரக் காட்சி

நான் ஒரு நாள் ஒரு சித்திரீகன் வீட்டுக்குச் சென்றிருந்தேன். அவன் முன்னே பெரிய பலகை ஒன்றிருந்தது. சில வர்ணங்களையும், தூலிகைகளையும் ஒரு பெட்டியினின்று எடுத்து, அவைகளை ஒன்றோடொன்று மிசிரமித்துக்கொண்டு பலகையில் தீட்ட ஆரம்பித்தான். அங்கு சில கோடுகளும் இங்கு சில கோடுகளுமாகச் சில வர்ணங்களைப் பூசிக்கொண்டே வந்தான். அவன் அப்பலகையின் பல இடத்தில் பல ரூபங்களை தத்ரூபமாக எழுதினான். பலகை பூராவும், பல மனித ரூபங்களும், பல மிருகங்களும், பல பட்சியினங்களுமாகவும், சோலைகளும், மாடமாளிகைகளும், வான மண்டலங்களும் அதிற் செல்லும் மேகத்திரள்களுமாகச் சில பொழுதில் வர்ணந்தீட்டி முடித்தான். கண் கொட்டாது பார்த்துக்கொண்டிருந்த எனக்கு அவன் எவ்வெப்பொழுது எந்த எந்த ரூபத்தை வர்ணந்தீட்டினானோ அவ்வப்போது அப்பொருட்களே என் கண்முன் பிரத்தியட்சமாயிருப்பது போலத் தென்பட்டது. அதில் ஓர் இடத்தில் ஓர் பெண் ஆடவனொருவனைப் பரிதாப முகத்தோடு கெஞ்சி மன்றாடுவது போலவும், அவ்வாடவன் அம் மன்றாட்டத்துக்குச் சிறிதும் இரக்கமில்லாதவன் போலவும் அவன் தூரத்தே நிற்கும் மற்றோர் பெண்ணிடம் தன் கவனத்தைச் செலுத்தியவன் போலவும் காணப்பட்டான். அவ்வாடவனை நான் வெறுத்தேன். பார்க்க மனமில்லை. மற்றோரிடத்தில் சில வாலிபரும், யௌவனப் பெண்களுங் கூடிக்குடித்து குதூகலமாயிருக்கக் கண்டேன். "ஐயோ! இவ்வாலிபர் ஏன் இப்படிக் கெடுகிறார்க" ளென்று எண்ணி அதையும் பார்க்க மனமில்லை. இன்னோரிடத்தில் ஓர் தாய், தன்னந்தனியளாய் தன்னருமை மகனை மார்போடணைத்துக் கருணை முகத்தோடு பாலூட்டி மகிழக்

கண்டேன்: "என்ன கருணை! என்ன அன்பு!" என்று மகிழ்ந்தேன். பிறிதோரிடத்தில் அம்பும் வில்லுந் தாங்கிய சில வேடர் ஒரு மானைத் துரத்திக் கொண்டோடவும், அது மிரண்டு ஓடித் தத்தளிக்கவும், பக்கப் புதரினின்றும் ஓர் சிங்கம் அவ்வேடன் மேல் குபீரெனப் பாய்ந்து அவனைத் தன் கூரிய நகங்களால் பீறிட, அவன் தேகத்திலிருந்து இரத்தம் ஆறாகப் பெருகவும் கண்டேன். அவ்வேடன் மேல் எனக்கு என்னையறியாமலே அநுதாப மேற்பட்டு, சித்திரிகன் பக்கத்திலிருந்த வர்ணந் தீட்டும் கத்தியை எடுத்து, அச்சிங்கத்தின் முகத்திலே குத்திவிட்டேன். அப்போது தன் வேலையின் போக்கிலேயே கவனஞ்செலுத்திக் கொண்டிருந்த சித்திரிகன், உடனே, "தம்பி! என்ன செய்துவிட்டாய், என் வேலையைக் கெடுத்து விட்டாயே!" என்று என்னைக் கோபித்துக்கொண்டான். அப்பொழுது, நான் அவனைப் பார்த்து, "இக்கொடிய மிருகம் ஒரு மனிதனை வதைக்கப் பார்க்கலாமா?" வென்றேன். "நல்லது தம்பி! இது சித்திரந் தானே! நான் சற்பித்து எழுதினேன், நீ கெடுத்துவிட்டாய். அழித்துவிடுகின்றேன். படம் கெட்டுப்போயிற்று, பலகை யாவது மிஞ்சட்டு"மென்று பூரா வர்ணங்களையும் மற்றோர் தூரிகையால் அழித்து விட்டான். என்னே! அங்கு நான் கண்டதாயுள்ள தோற்றங்களெங்கே! பழைய பலகைதானே மிச்சமா யிருந்தது.

ஓம். தத் சத்.

---

## 3. பக்தியின் பரவசம்

மனமே! நீ சில சமயங்களில் தெய்வ உணர்ச்சிபெற்று தோத்திரிக்கின்றாய். கோயில்கண்ட இடமெல்லாம் தொழு தெழுகின்றாய். நீ எவ்வளவு அறிவுடையனாயினும், எல்லா சமர்த்தையுஞ் செய்ய வல்லோனாயினும், வானிலாகட்டும் கடலினாகட்டும் ஊடுருவிச் செல்லும் நுண்ணிய கருவிகள் அமைக்கும் சருமானாயினும், உன்னைப் பார்க்கிலு மிக்க வல்லான் ஒருவனிருக்கிறான் என்ற உணர்ச்சியே, உன்னைப் பக்தியின்பால் ஈடுபடுத்துகிறது. நன்றே செய்தாய். நீ தெய்வத்தினிடம் காட்டும் பக்திவிநயம், ஏதோ ஒரு நயம் பற்றியா, அன்றிப் பரம பிரீதியாகவா செய்கின்றனை? சொல். அப்படியாயின், நின் உற்றார் உறவினர் பெண்டு பிள்ளைகளிடத்துக் காட்டும் உன் அன்பென்ன பக்தியா குமோ? பக்தி என்பது: உன்னில் மிக்க அறிவோரும் வல்லோருமாவாரிடத்து நீ உன்னிலையைத் தாழ்த்தி அவர் நிலையை உயர்த்திக் காண்ப தொன்றன்றோ? அங்ஙனமாயின் உன்னைச் சூழ்ந்துள்ள எப்பொருள்தான் உன்னிலும் இழிந்த பொருள். நீ இழிந்த பொருளாய்க் கருதும் சில பொருளும், சில காலங்களில் பெரும் பொருளாயன்றோ காண்கின்றாய்? அங்ஙனம் நீ காட்டும் பக்திவிநயம் ஒருதலைப் பட்டதல் லவோ? ஆகையால் மனமே! நீ தெய்வ உணர்ச்சியால் காட் டும் பக்தியே போல, மற்ற, உன்னோடொத்த சமத்துவப் பொருள்களிடத்தும், இழிந்த பொருள்களிடத்தும், பக்தி யைச் செலுத்திப் பார். ஏனெனில் எல்லாப் பொருட்களும் ஏதோ ஒரு பெரும் பொருளின் பல வடிவங்களேயாம். நீ உன்னில் இழிந்த பொருளாய் ஒரு பொருளையுங் கருதாதே. உன் நிலையை எப்போதும் தாழ்த்திப் பிறர் நிலையை எப் போதும் உன்னில் மிக்கதென்றே கருது. அப்போதுதான் நீ

எப்பொருளுக்கும் மேலாம் ஒரு பொருளின்பால் பக்தி செலுத்தக்கூடிய பக்குவம் வாய்ந்தவன். "நம் அறிவென்ன! நம் திறமை என்ன! நம பிறப்புயர்வென்ன!" என்று என்றேனும் எண்ணாதே. உன் அறிவையும் திறமையையும் பிறப்புயர்வையும், பிறர் கணிக்க வேண்டியதிருக்க நீ தானே அவைகளை நினைத்து அகங்கரிப்பையானால், ஐயோ! உன்னிலை மிகத் தாழ்ந்தே போகும். ஆனதால் மனமே! இன்று முதல் நீ காணும் எப்பொருளிடத்தும் பக்திவிநயமாய்ப் பரவசப்படு. நீ உண்மைப் பக்திமானாயின், ஒரு பொருளிடத்தும் துவேசங் காட்டாதே. துவேச புத்தி உன்னிடம் கிஞ்சித்தேனும் இருக்குமாயின் உன்னைக் கெடுத்துவிடும். பார்த்தவிடமெல்லாம், பார்த்த பொருளெல்லாம், பரமனென்றே கருது. "பார்க்குமிட மெங்கு மொரு நீக்கமற நிறைகின்ற பரிபூரணானந்தமே" உன் பக்திக்குரிய பொருள், அதைத் தவிர உன்னில் இழிந்த பொருளோ சமத்துவமுடைய பொருளோ வேறு கிடையா. ஆனதால் "கண்டன வெலாமுனது தெய்வமாகக் கருதி வழிபடும் நிலை கைவர", அவ்வானந்தப் பொருளோடு பரவசப்பட்டு நிலைத்து நில். அன்றே நின் பக்தியின் பலன் காண்பாய்.

ஓம். தத் சத்.

---

# இந்தியச் சிற்பம்

இந்தியச் சிற்பத்துள் கோயில், கோபுரம் ஸ்தூபி, சிலை, வாகனம், மண்டபம், மாளிகை, கூடம், தடாகம், தேர் முதலியவைகளின் நிர்மாண சாஸ்திரமும், அவற்றிற்கு உபயோகமான மண், கல், மரம், உலோகம், துணைக்கருவி இவைகளின் தன்மையும், அதனைப் பண்படுத்து முறையும், அவைகளை விசித்திரப்பாடுடையதாய்க் கண்கவர்ச்சிகொள்ள நுணுக்க வேலைகளால், அலங்கரிப்பதும் அடங்கும்.

சிற்ப சாஸ்திரம், பூர்வ அனுஷ்டான ரீதியாகவும், இயற்கை ரீதியாகவும், இன்னின்ன விக்கிரகங்கள், இன்னின்ன கோயில்கள், இன்னின்ன மாடங்கள், இன்னின்ன விதமாய்த்தான் செய்யப்பட வேண்டுமென்றும், அவை ஒவ்வொன்றிலும் இன்னின்ன அம்சங்கள் அமையப்பெற வேண்டுமென்றும், உயரம் அகலம் நீளம் இவைகளை வரையறுத்துச் சொல்லும். சாஸ்திர ஒழுங்கின்படி செய்யும் ஒவ்வொரு நிர்மாணமும் இவ்வளவு காலம் நிலை நிற்குமென்றும், சாஸ்திர விரோதமாகச் செய்யும் நிர்மாணங்கள் காலக்கிரமத்தில் அழிந்துபோகும் என்றும், அவ்வாறு அழிந்து போகாதிருக்க வேண்டும் பிராயாச்சித்தமும் புகலும் அப்பெரும் சாஸ்திரம். இப்பெரும் சாஸ்திரம், பலகால அனுபவத்தாலும், அனுஷ்டானத்தாலும் கைவந்த ஒரு பெரும் பொக்கிஷம். இந்தியச் சிற்பம் பூர்வம் மயன் என்னும் தெய்வ சிற்பியால் எழுதப்பட்டுள்ளதென்பர் பெரியோர். இதனை ஆதாரமாக வைத்துக்கொண்டே இந்தியாவில் ஆங்காங்கு தோன்றும் பூர்வ கோயில்கள், மாடங்கள், விக்கிரகங்கள் முதலியன நிர்மாணிக்கப்பட்டன என்பதும் உலகப் பிரசித்தம். தற்காலத்தும் அம்மயன் வழிவந்த சிற்பிகள் இத்

தென்தேயத்தில் சிலர் இருக்கிறார்கள். அவர்களிடம், இம் மயன் எழுதிய சிற்பச்சுவடி ஒன்று வெகு பத்திரமாய்ப் பாதுகாக்கப்பட்டு வருகின்றது. எந்த நிர்மாணம் இச் சிற்பிகள் செய்ய நேர்ந்த காலத்தும், தங்கள் சிற்பச்சுவடியிற் கண்ட முறைப்படியே செய்து வருகிறார்கள். அதற்கு மாறாய், நாம் சில மாறுதல்கள் செய்யச் சொன்னால் அதனால் நேரும் பிந்திய கஷ்டத்தையும் அவர்கள் அச்சுவடியிலிருந்தே ஆதாரமாய்ச் சாட்சி கொடுக்கிறார்கள்.

அந்தச் சிற்ப சாஸ்திரத்தை ஆராய நேர்ந்தால் ஆதியில் இவ்வுலக சிருஷ்டிக்குக் காரணமாய் விஸ்வரூப விராட் புருஷன் என்னும் பிரமம் ஒன்று இருந்ததாகவும், அதனிடத்திலிருந்தே பல கோடி சக்திகள் வெளிப்பட்டன வென்றும், இவ்வுலகில் நிகழும் பல தொழில்களுக்குக் கர்த்தர்கள் இச் சக்திகளே யென்றும், இவர்கள் செய்யும் ஒவ்வொரு நிர்மாணமும் பூர்வ விராட் புருஷனுடைய கற்பிதக் கட்டளை யென்றும், அதற்கு விரோதமாய் ஒன்றும் நடப்பதில்லை யென்றும் சொல்லுகின்றது. அங்ஙனம் விராட் புருஷனால் பல சக்திகளுக்குக் கற்பிக்கப்பட்ட சாஸ்திரங்களில், மயன் மூலமாய்ச் சிற்ப சாஸ்திரம் பூலோக நிர்மாணத்துக்குக் கொடுக்கப்பட்டதென்பது அறிஞர் கொள்கை.

நாம் செய்யும் ஒவ்வொரு காரியத்திலும் பூர்வ முதலாசுவே அநுஷ்டானத்தி லிருந்ததை மிகவும் பெருமைப்படுத்திக் கையாளும் வழக்கம் நமக்குட் பதிந்து வேரூன்றியிருப்பது எவரும் மறுக்காத ஒரு பிரமாணம். அதனாலேதான் பலதேய நாகரிகங்களோ, அநுஷ்டானங்களோ நம்மிடை காலவரையறையுள் வந்து புகுந்தும் நம்மிடத்துள்ள பூர்வ சின்னங்களே மலிந்து நிற்க இப்போதும் காண்கின்றோம். ஜன நிர்மாணமாகட்டும், அரசியல் நிர்மாணமாகட்டும்,

குடும்ப நிர்மாணமாகட்டும், கிரியை நிர்மாணமாகட்டும், தேவதா பூசை நிர்மாணமாகட்டும், ஒவ்வொன்றும் அதில் பங்குபெறுகின்றது. அவ்வித நிர்மாணங்கள், பூர்வம் பல அறிவுடையோர்களால், இத்தேச க்ஷேமத்தைக் கருதியே பலகால அனுபவமுங் கொண்டே செய்யப்பட்டது. அதுவே அப்போது வாழ்ந்த சர்வஜன சம்மதமாகவும் கொள்ளப் பட்டது. பின்னர் காலஞ் செல்லச் செல்ல ஜன ஒற்று மைக்கும் உலக ஒழுங்குக்கும் ஏற்பட்ட அவைகள் பல மலினமடைந்தும், பல வேறு முறையில் அனுஷ்டிக்கப் பட்டும் வருகின்றன.

நமது தேசமோ பூர்வம் பல பாகங்களாய்ப் பிரிக்கப் பட்டு, 56 தேச அரசர்கள் ஆட்சி புரிந்தார்களென்று சொல்லப் படுகிறது. இத்தேயம் பூர்வம் செழிப்பும், செல்வமும் ஓங்கி, பொன் விளையும் போக பூமியாயிருந்தது. ஒவ்வொரு அரசரும் தம் தேச நிர்மாணத்தில் மிகுதியும் கவலைகொண் டிருந்தார்கள். நீடித்த காலம் நிலைப்பனவான பெரும் நிர் மாணங்களும் அவர்களால் ஸ்தாபிக்கப்பட்டன. பல கைத் தொழிலாளர் இவ்வரசரால் ஆதரிக்கப்பட்டு மேலும் மேலும் தம் தொழிலை விருத்திசெய்துவந்தார்கள். இவர்களுக்குள் ளிருந்த பெருங் குறையெல்லாம் ஒற்றுமை யின்மையே. அதனால் பல பெரும் போர்கள் இந் நாட்டில் நிகழ்ந்தன. சில அற்ப விஷயங்களைக் காரணமாகக் கொண்டு, ஒருவர் நாட்டை ஒருவர் கைப்பற்றவும் நேர்ந்தது. சண்டைக் காலங் களில் ஒருவர் அரணை ஒருவர் இடித்தும் ஒருவரால் பூஜித மாகக் காப்பாற்றப்பட்ட பொருள்களை ஒருவர் கொள்ளை கொண்டும் சென்றார்கள். இம்மட்டோ! பக்கநாட்டு அன்னிய அரசரும், இந் நாட்டின் பொருட் செறிவையும், செழிப்பை யும் கண்ணுற்றுப் பல தடவையும் படைகொண்டு பல பூர்வ

நகரங்களைப் பாழ்படுத்தியும், கொள்ளைகொண்டும் சென்றார்கள். என்றாலும், இன்றும் நம் நாட்டின் புகழையும், பெருமையையும், ஏனைய நாட்டாருக்கு எடுத்துக்காட்டும் கலங்கரை விளக்கமாக நிற்கும் நிர்மாணங்களும் சில உள.

இந்தியச் சிற்பமாவது நான்கு வகைப்படும். அவை கற்சிற்பம், லோகச்சிற்பம், மரச்சிற்பம், பலகைச்சிற்பமாம்.

கற்சிற்பமாவது கோபுரம், கோயில், தடாகம், மாடம், மாளிகை, அரண் முதலியன கட்டுவதற்கு உபயோகமாகும் கல், அதனை உபயோகிக்கும் முறை, அவைகளின் விசித்திர வேலைப்பாடு, விக்கிரகம் அமைத்தல் முதலியன ஆகும்.

உலோகச் சிற்பமாவது ஸ்தம்பம், கும்பம், உற்சவ விக்கிரகம், வாகனம், பண்டபதார்த்தம், அரசர்க்குஉபயோகமாகும் சேடயம், சத்தி, சிம்மாசனம், குடை முதலியன பஞ்சலோகங்களில் அபூர்வ வேலைத்திறனுடன் அமைத்துச் செய்வதாம்.

மரச் சிற்பம் மேற்கண்ட கோயில்களின் கோபுரம், மாடம் மாளிகை, அரண், தேர், ஸ்தம்பம், உற்சவ விக்கிரகம், வாகனம், அரச சிம்மாசனம், மற்றும் கண் கவர்ச்சிகொள்ளும் ரூபங்கள் அமைத்தல், செடிகொடி தோண்டி எடுத்தலாகும்.

பலகைச் சிற்பமாவது மற்ற மூன்று சிற்பத்துக்கு ஆதாரமாய் எதைச் செய்யவேண்டுமோ அதனைச் சிறிய அளவில் பருமன், உயரம், அகலம் முதலியவற்றைக் குறித்தலும், நான்கு திசைகளிலிருந்தும் நோக்குங் காலத்தில் தோன்றும் ஒழுங்கின்மைகளை ஒழுங்குபெற வரையறுத்தலும், அங்ஙனம் செய்யப்படும் சிற்பங்களுடைய, நிறம், பேதா பேதம் முதலிய இயற்கையைக் காட்டும் ரூப நிர்மாணமாம். அவ்வாறு பெரும் பொருள் நிர்மாணிப்பதற்கு

முன்னே அதனைச் சிறிய அளவாகக் குறித்துக் கொள்வதற்கு மேல்நாட்டார் பிளான் (Plan) என்று சொல்லுகிறார்கள்.

பூர்வம் சிற்பமானது ஜனங்களின் பொது நிர்மாணமாகக் கருதப்பட்டது. பெருங் கோட்டைகள், மதில்கள், கோயில்கள், பொது மாடங்கள், தேர்கள், வாகனங்கள், ஜனங்களின் பாதுகாப்பிற்கும், வழிபாட்டிற்கும், மன வெழுச்சிக்கும் சாதகமாய் அப்போதுள்ள அரசர்களாலும், அறிவுடையோராலும் பெரிதும் போற்றப்பட்டுவந்தன. அவைகளை நிர்மாணிப்பதில் ஜனங்கள் காட்டின ஊக்கம் பெரிதும் உவக்கத் தக்கது. ஒவ்வொருவரும் தமக்குத் தெரிந்த வேலைகளைச் செய்ய முன் வந்தனர். சிலர் ஒரு வகுப்பினராய் ஒரு தொழிலைப் போற்றிவந்தனர். அவர் தம் அனுபவத்தால் அடைந்த தேர்ச்சியின் விளக்கங்களே இன்று நம்மிடை நிற்கும் நிர்மாணங்கள். இவ்வாறு ஜன நிர்மாணம், பொது ஜன முற்போக்கைத் தழுவி, ஒழுங்குபெறப் பாதுகாக்கப்பட்டு வந்தது. இவைகளுக்கெல்லாம் இயற்கையே பெருந் துணையாய் நின்றது என்பது வெளிப்படை.

பூர்வம் மனு இவ்வுலகத்தில் நகர ஆரம்பித்த காலத்தில் அவனுக்குள் இன்றியமையாதனவாய் அமைந்த இயற்கை நிர்ப்பந்தங்கள் அவனைப் பல செய்கைகளுக்குத் தூண்டியிருக்கவேண்டும். பசியாலும், சோர்வாலும், மழை பனி வெயிலாலும் வருந்தும்போது அவைகளைத் தணிக்கப் பல முயற்சிகள் செய்து, தன்னிடத்து அடங்கியிருக்கும் சக்தியை உபயோகித்துப் பசி, தாகம், பிணி முதலிய நிர்ப்பந்தங்களை நீக்க ஒவ்வொரு மனுவும் தூண்டப்பட்டிருக்கவேண்டும். இயற்கையில் அவனுக் கனுசரணையாக, அவன் தன் விருப்பத்துக் குகந்த, பல பொருள்கள் மலிந்திருப்பதை உண்டும், இடங்கண்டு ஒதுங்கியும், பின்னர் காலவரையறையில்

அதன் விசேடம் கண்டு காதலித்தும், ஒவ்வொரு மனுவும் தன் வாழ்நாள் கழித்துவந்திருக்கவேண்டு மென்பது என் கொள்கை. அவ்வாறு தமக்குச் சாதகமாய்த் தம் போஷணைக்கு வேண்டிய பல பொருள்களைப் பெற்ற காலத்து, தமக்கு உற்ற அனுபவ முறைகளைத் தம் போலொத்த பிற மனுக்களுக்குஞ் சொல்லி, அவர் தம் அனுபவத்தையும் அறிந்து ஒவ்வொருவரும் உலக அறிவில் மேம்பாடுற்றார்கள். இதை வைத்து நோக்குங்கால், இவ்வுலக நிர் மாணத்துக்குக் காரணமாய் ஒரு பெருஞ்சக்தி ஊடுருவி நிற்கின்றதெனக் காண்போம். அதன் கிருபை நமக்குக் கிடைக்கவும், அதனை வழிபடவும், கண்கூடாய்க் கண்டுகொள்ளவும், பலர் நம்மில் துணிந்தார்கள். எங்கே தேடியும் காணப்படாததால், அப்பெருஞ் சக்தியை அவரவரும் அவரவர் மனப்போக்கின்படியே ஆராதிக்க நேர்ந்தது. சிலர் ரூபமென்றனர்; சிலர் அரூபமென்றனர்; சிலர் குணனென்றனர்; சிலர் நிர்க்குணனென்றனர். இன்னும் பலர் பலவிதமாய்ச் சொல்லி நம்மை ஒரு முடிவுக்கு வரவொட்டாமல் செய்துவிட்டனர். ஆனாலும் நம் பூர்வ முதாதைகள், இப்பெருஞ் சக்தியை மறந்தாரில்லை. அதன் கிருபா நோக்கப்படியே எல்லாம் நடக்கிறதென எண்ணி, அதனை ஞாபகமாகக் கருதிப் பல இடங்களை ஸ்தாபித்து, அதில் ஒன்றுசேர்ந்து வணங்கி வந்தார்கள். அங்ஙனம் அப் பெருஞ் சக்தியைக் குறித்துத் தோத்திரிக்கும் இடங்களே பின்னர் கோயில்களாயின. அக்கோயில்களில் உள்ள பல ரூப விக்கிரகங்கள் இப்பெருஞ் சக்தியை ஞாபகமூட்ட ஸ்தாபித்தவர்களுடைய மனப்பாங்கை ஒட்டி, நிர்மாணிக்கப்பட்டன. இவ்விதமாக நாம் எந்தக் கோயிலைப் போய்ப் பார்க்க நேர்ந்தாலும், அங்கு பல ரூப நாம பேதங்களுள்ள விக்கிரகங்களும், அவற்றிற்குரிய ஸ்தானங்களும் காண்போம். குதிரைமேலும், மயில்

மேலும், காளைமேலும், கிளிமேலும், அன்னத்தின்மேலும், காக்கைமேலும், கருடன்மேலும் தோன்றும் மனித விக்கிர கங்கள் பல உண்டு. இம்மட்டோ, ஒன்றுக்கு யானை முகம், ஒன்று குதிரை முகம், ஒன்று பன்றி முகம், ஒன்றுக்கு மீன் முகம் முதலிய பல வேறுபாடுடைய விக்கிரகங்கள் அமைந்த கோயில்களுமுண்டு. அப் பெருஞ் சக்தியை அறிய ஆசை கொண்டார் பலரும் பலவிதமாய் ரூபீகாரப் படுத்திக் கொண்டார்கள் என்பதைச் சுட்டிக் காட்டவே நான் இவ்வாறு பிரஸ்தாபிக்க நேர்ந்ததேதவிர, அவ்விக்கிரகங்களையோ, ஆரா தனையையோ, அதன் ஆழ்ந்த கருத்துப் பதிந்த தோற்றங் களையோ கண்டிக்க வந்தவனல்லன். நம் பூர்வ சிற்பிகள் ஜனங்களின் மனப் போக்குக்குச் சாதகமாகவே கடவுளரைப் பல ரூபங்களாய்ச் செய்திருக்கிறார்கள். அதோடு இயற்கை யில் அவர்கள் கண்கூடாய்க் கண்டனவெல்லாம் தெய்வ அம்ச மாகவே நிர்மாணித்ததை நோக்கும்போது, ஸ்ரீ கிருஷ்ண பகவான் கீதையில் அருச்சனனைப் பார்த்து, "நண்ப, என்னை ஆராதிப்பவர்கள் என்னை எந்த ரூபமாய் நினைத்து ஆராதிக் கிறார்களோ அந்த ரூபமாய் அவர்களுக்கு நான் பிரசன்ன மாகின்றேன்" என்று சொன்னதும், "பிரமமாகிய நான் காணும் பொருள்களி லெல்லாம் அதனதன் மயமாய் நிற் கிறேன்" என்று சொன்னதும் ஒப்ப நேருகிறது. ஆதலால் சிற்பிகளுடைய மனப்போக்கு ஜனசமூக மனப்போக்கே யாகும்.

இது மாத்திரமோ! சில மண்டபத் தூண்களிலும், தேர்களிலும், சிற்பிகள் தம் வேலைத்திறமையைக் காட்டி நிர் மாணித்திருக்கும் விசித்திரங்களை நோக்கினால், ஜனங்களுக்கு எது எது பிரீதியோ அதனையே கல்லிலும், மரத்திலும் கணித்திருப்பதாகக் கொள்ளலாம். காமி காம மூட்டத் தக்க விக்கிரக சேஷ்டைகளைப் பார்த்தும் ஞானி, ஞான

முகூர்த்தமாய் விளங்கும் ரூபங்களைப் பார்த்தும், சிறியவர் விநோத ரூபங்களைப் பார்த்தும், கலைஞன் கல் வெட்டுக்களின் நீதிகளைப் பார்த்தும் மகிழ, கோயிலில் பல விடங்களில் பல காட்சிகள் செய்யப்பட்டிருக்கின்றன வென்றால், பல் திறத்தரும், பல் குணத்தரும் ஒருங்கே வந்து, அங்கே கூடிக் கொஞ்ச நேரமாவது, இருந்து போக வேண்டுமென்னும் ஆழ்ந்த கருத்தைக்கொண்டே, சிற்பிகள் அவைகளை நிர்மாணித்திருக்கிறார்க ளென்னலாம். இதனால் பூர்வ இந்தியச் சிற்பிகளின் மனப்போக்கு அறியச் சாதகமாகிறது. இவ்வித ரூப பேதங்களைச் சிற்பிகள் நிர்மாணிப்பது இந்திய தேசத்தில் மாத்திரமல்ல, ரோம், எகிப்து, பாபிலோன், கிரீஸ், சைனா, பர்மா முதலிய விடங்களிலும் அங்குள்ள சிற்பிகள் நிர்மாணித்திருப்பதை நோக்குங்கால், உலக மக்கள் தெய்வ வழிபாட்டிற்கு, இவைக ளெல்லாம், சாதக மென்றே கருதினார் போலும்.

இனி இந்தியச் சிற்பமானது, பூர்வ இந்தியக் குடிகளால், தெய்வ வழிபாடு செய்யுங்கோயில்களிலும், அரச மாளிகைகளிலும், அதனை அடுத்த மற்றும் இடங்களிலும் விளங்குகின்றது. நம் இந்து தேசமோ பல வகுப்பினர் கொண்ட ஒரு தேசம். இவர்கள் ஒருவருக்கொருவர் யாத்திரைக் காலங்களில் அளவளாவும் வழக்கம் பெரிதும் தெய்வ வழிபாட்டோடு பொருத்தப்பட்டிருந்தது. அதனாலேதான் பல நகரங்களிலுள்ள, கோயில்கள் வேறு வேறானாலும், அதற்கு ஏற்றம், தாழ்ச்சி, புராணிகர்களால் கற்பிக்கப்பட்டு, தென்னாட்டிலுள்ளோர் வட நாட்டுக்கும், வட நாட்டார் தென்னாட்டிற்கும், க்ஷேத்திர யாத்திரை செல்லுதல் முற்காலத்து நடந்து வந்தன. அப்போது அங்கங்குள்ள விசித்திர விநோதங்களும் காணப்பெற்று, தம் நாட்டுக்குத்

திரும்பியபின், அவர்கள் நாட்டில் குறைவுற்றதாயும் பிற நாட்டிலுள்ளதாயுமுள்ள பல நிர்மாணங்கள், ஸ்தாபிக்கப் பட்டன. இதனாலேதான் ஓர் காலத்தில் இவ்விந்திய தேச முழுவதும் ஒன்றுக்கொன்று சம்பந்தமான, பொருத்தங்க ளுடைய பல சாஸ்திரங்களும், நிர்மாணங்களும், செய்யப் பட்டிருக்க வேண்டும். அப்படிப்பட்ட பெரிய நிர்மாணங் களை வடநாட்டில் காசி, வடமதுரை, சோமநாத், கயா, இந்திரப்பிரஸ்தம், அயோத்தி, ஹரித்துவார் முதலிய பெரும் க்ஷேத்திரங்களிலும், தென்னாட்டில் மகாபலிபுரம், காஞ்சி, திருவாரூர், சிதம்பரம், மதுரை, ராமேஸ்வரம், திருநெல்வேலி, குமரி முதலிய க்ஷேத்திரங்களிலும் உள்ள கோயில்கள். அக்கோயில்களிலுள்ள கோபுரம், ஸ்தூபி, ஸ்தம்பம், உற்சவ விக்கிரகம், கல்லில் செதுக்கிய விக்கிரகம் முதலியன பெரிதும் சிற்பசாஸ்திர அமைப்புக்கு அங்கமாகச் செய்யப்பட்டிருக்கின்றன. ரூப பேதங்கள் அங்கங்குள்ள சிற்பிகளின் மனப்போக்கு வேலைத்திறம் முதலியவற்றிற்குத் தகுந்ததாய்ச் செய்யப்பட்டிருந்தாலும், அவைகளிலுள்ள பொது நோக்கை எங்கும் காணலாம். பௌத்தர் காலங்களில் செதுக்கப்பட்ட மலைக்குகைகளில், எலிபெண்டா, அஜண்டா முதலிய குகைகள், ஒரே மலையில் வெட்டப்பட்டனவாய்ப் பல தூண்களும் பல விசித்திரங்களடங்கிய பல துறைகளும், மதச்சின்னங்கள், மத நீதிகள், மதஸ்தாபிதர்களுடைய கல் வெட்டுக்கள் அடங்கியிருந்தனவென்றால் பூர்வச் சிற்பிகளின், வேலைத்திறன் எங்ஙனம் புகழ்தற்குரியதென்பதை நீங்களே நிதானிக்கலாம். காசியில் பூர்வ இந்து ஆலயமாயிருந்ததை மகம்மதிய அரசர் காலத்தில், பேர்த்து மசூதி முதலியன கட்டியிருப்பவைகளை இப்போது பார்த்த புராதன ஆராய்ச்சி யாளர் அம்மசூதிகளில் பல இந்து அரசசரித்திரங்களடங்கிய கல்வெட்டுக்களிருக்கின்றன என்கின்றார்கள். இம்மட்டோ!

முகம்மது கஜினி, சோமனுத், வட மதுரா முதலிய கோயில் களையும், அரண், மாளிகைகளையும் இருந்த இடம் தெரியா மல் தட்டி நிரப்பி, அவைகளைக்கொண்டு பல மசூதி கட்டி யிருக்கின்றுனென்ருல், பூர்வ சிற்பச் சின்னங்களை எங்ஙனம் ஒழுங்காய்ச் சொல்ல நேரும்? அநேக பொன் விக்கிரகங்கள், பொக்கிஷங்கள், அருமைப் பண்டபதார்த்தங்களெல்லாம் மகம்மதியர் காலத்தில் இங்கிருந்து கொள்ளைகொண்டு போகப்பட்டன. நமக்குள் ஒற்றுமையின்மையாலும், மத வேறுபாட்டாலும், புதுப்புது மதங்கள் ஸ்தாபிக்க நேர்ந்த காலத்தெல்லாம், எந்த மதம் தாழ்ச்சி அடைகிறதோ அதன் அறிகுறியான கோயில்கள், தட்டி நிரத்தப்பட்டனவென் ருல் பிறரை நாம் குற்றம் கூற வழியேது? தென்னுட்டி லுள்ள மகாபலிபுரத்தை உங்கள் வாழ்நாளில் என்றைக்கா வது பார்க்க நேர்ந்தால் அங்கங்கே சிதறுண்டு கிடக்கும் தூண்களையும், மதில்களில் அநேக பூர்வ அரசர்களின் சித் திரத்தையும் ஒரே கல்லில் அழகுபெறச் செதுக்கப்பட்ட தேரையும், பெரும் மண்டபங்களையும், அதனுள் நிர்மா ணிக்கப்பட்ட பல விக்கிரகங்களையும் கண்டு ஒரே ஆச்சரிய மடைவீர்கள். அங்குள்ள சிலைகள் பூர்வ பல்லவ அரசர் களால், தம் சிற்பிகளின் முழுத்திறமையையும் காட்டச் செய்து, சிற்ப முறையில் இன்னும ஓர் அங்கமாக விளங்கு கின்றது. பூர்வ நிலையில் நம் இந்தியச் சிற்பிகள் செய்த ஒவ்வொரு அபூர்வப் பெருந் தொழிலேயும் நாம் கண்டு களிக் கப் பாக்கியம் பெற்றிருந்தோமில்லை. கொள்ளைக்காரர்களால் பிரயோசனமற்றதாகக் கருதப்பட்டு ஒதுக்கப்பட்ட சில வேலைத் திறன்களைக்கண்டே நாம் நமது பூர்வ சிற்பிகளின் தன்மையை அனுமானிக்க நேர்ந்துளது. ஆனல் அவர்கள் செய்துள்ள முழுத் திறனேயும் காணும்போது நாம் எவ் வளவு மகிழ்வோம்!

நமது இந்திய தேசமோ பல அன்னிய தேசத்தார்களால் பல தடவை படையெடுக்கப்பட்ட தென்று நாம் சரித்திர பூர்வமாக அறிந்த ஒரு உண்மை. அங்ஙனம் படையெடுத்து வந்தவர்களில், கிரேக்கர் காலத்தில் நமது சிற்ப சாஸ்திரங்களில் பல மாறுதல்கள் நேர்ந்தன. பின்னர், போர்த்துக்கேசியர், டச்சுக்காரர், பிரான்ஸியர், பாரசீகர்கள் முதலிய அன்னியர்களின் சிற்பத் திரள்களும், இந்தியச் சிற்பத்துள் கலந்தன. பாதிவட்ட (Semi arch) வளைவுகளும், உச்சி வட்ட வளைவுகளும் (Gothic arch) பாகவட்ட வளைவுகளும் (Segmental arch) தூண்களின் அடியில் வட்ட வளைவுகளும், எண்கோண அறுகோண வளைவுகளும், தூண்களின் மேல் தாடிப் பலகை அதாவது தாங்கு கல்களில் உள்ள வளைவுகளும் நம் பூர்வ சிற்ப சாஸ்திர நிர்மாணங்களி லிருந்ததில்லை. இவைகள், காலாவதியில் பல தேய சிற்ப நிர்மாணத்திலிருந்து நிகழ்ந்தன. மகம்மதியர் காலத்தில் ஏற்பட்ட சிற்ப மாறுதல்களும் பலவுள. அவர்கள் காலத்தில் கட்டப்பட்டுள்ள டாஜ்மஹால், ஜம்மா மஜீத், மோத்திமஹால் முதலிய பெரும் நிர்மாணங்களும் இந்தியச் சிற்பிகளின் பெருமையை விளக்கும். மகம்மதியர் காலத்துள்ள பெரும் வேலைத் திறன்களும் இந்தியச் சிற்பிகளாலேயே மகம்மதியரின் மேற்பார்வையின் மேல் அவர் தம் மனப் போக்கை ஒட்டிச் செய்யப்பட்டன. பௌத்தர்கள் பூர்வ இந்துமதக் கோயில்களுக்கும், தமது கோயில்களுக்கும் வித்தியாசம் தெரியவேண்டு மென்று சில மாறுதல்கள் இந்தியச் சிற்ப முறையில் செய்தார்கள். அவர்கள் கோயில்களுக்கும், பூர்வ இந்துமதக் கோயில்களுக்கும் பல வித்தியாசம் உண்டு. இந்து மதக் கோயில்களில், கோபுரங்களின் அடிப்படை சதுரமா யிருப்பதில்லை. புத்த கோபுரங்களோவெனின் அடிப்படை சரிசதுரமே. வரவர ஒடுங்கிப்போகும்

தன்மை இரண்டு கோபுரங்களிலும் உண்டென்றாலும் இந்து மதக்கோபுரங்கள் உச்சியில் சதுரமாய்ச் சேருவதில்லை. புத்த மத கோபுரங்கள் சதுரமாயே அமையும். கும்பங்கள் நிர்மாணிப்பதிலும் பௌத்தருக்கும், இந்துக்களுக்கும் பல வேறுபாடுண்டு. அதனைச் செவ்வனே கண்கூடாய்க் கண்டாலன்றிச் சொல்லச் சாத்தியப்படாது. புத்தமத கோபுரங்களின் உச்சியில் ஒரே கலசந்தான் ஸ்தாபிக்கப்படும். இந்துமதக் கோபுரங்களிலோ, 1, 3, 5, 7, 9 வரை ஸ்தாபிப்பார்கள். புத்த விக்கிரகங்கள் ஒரே தன்மையா யிருக்கும். (அதாவது நிஷ்டை கூடியிருக்கும் தன்மையும், கைகளை இரண்டு பக்கங்களில் ஒருங்கே சேர்த்து நிற்கும் தன்மையும், நிர்வாண நிலையும்.) அசோகமரத்தடியில் முக்குடை கவித்த விக்கிரகங்களுக்கு எல்லாம் தலைமுண்டகம் செய்திருக்கும். ஒன்று போலுள்ள பல விக்கிரகங்கள் ஒரே இடத்தில் தோன்றும். இந்துமதக் கோயில்களிலோ பல ரூபமும், சிகையுடைய ஆண், பெண் பேதமுடையவும், பல கிரியை உடையவுமான விக்கிரகங்களே மலிந்து காணலாம். சமணருக்கும் பௌத்தருக்கும் சில பேதங்கள்தான் காணப்படுகின்றன. அவர்களின் நிர்மாணங்களும் சில சில பேதமுடையன. காலத்துக்கேற்ப கோலங்கொண்டோர் சிற்பிகளே. அவர்கள் பலதிறத்து வேலைத்திறனும் தம்மிடம் உண்டென்பதைப் பல்வேறுபட்ட கோயில் நிர்மாணங்களால், காட்டியிருக்கிறார்கள். அரசர்களுக்கு அரியாசனம் அமைத்து அரசனின் வீரபிரதாபத்தைப் பெருமைப்படுத்தினவர்களும் அவர்களே. மகம்மதியருக்கு மயிலாசனம் வகுத்து மகிழுற அமைத்தவரும் அவர்களே. அற்பப் பொருள்களை இந்தியச் சிற்பிகள் செய்யுங் காலத்தும் அதனுள் தம் சிற்பத்திறனைக் காட்டிப் பிறர் பார்த்து ஆசை கொள்ள ஏதாவதொரு விசித்திரம் செய்வார்கள். அவர்களுக்குக் கல் எல்லாம் களிமண் சமானமே. மேல்நாட்டுள்

அதிக மேன்மை பெற்ற சிற்பிகளால் நிர்மாணிக்கப்பட்டுள்ள செயிண்டு பால் கோயில், அத்தனை கோயில், ரோமாபுரியிலுள்ள கோயில் முதலியனவெல்லாம் தற்போது எஞ்சிய இந்தியக் கோயில்களுக்கு எத்தனை தாழ்ந்தபடியில் சிறிய அளவினவாக நிற்கின்றனவென்பதை மேல்நாட்டார் பலரும் ஒப்புவர். அவற்றுள் அமைக்கப்பட்டிருக்கிற வேலைத்திறன்களும் சிலா நிர்மாணங்களும் இந்திய சிலா நிர்மாணங்களுக்குக் கொஞ்சமேனும் சரிசமானமாகக் கொள்ளப்படுவனவல்ல. மேல்நாட்டார் இயற்கையில் கண்கூடாய்க் கண்ட பொருள்களையே கணித்தார்கள். மேல்நாட்டார் மனப்போக்கின் உணர்ச்சி இயற்கையி னளவாயிருந்தது. இந்தியரின் மனப்போக்கு கற்பிதமாயிருந்தது. எவ்வகையிலும் இந்தியச் சிற்பத்தின் ஏற்றத்தை இவ்வுலகில் நிலைநாட்ட இன்று நம் நாட்டில் உள்ள கோயில்களே போதும்,



# குறிப்பு

**Manana-malai**—மனன மாலை என்ற தலைப்பில் 32-பாட்டுக்கள் வரை பாடப்பெற்றிருக்கின்றன. அவற்றில் பத்துப் பாட்டே இக்கினைவு மலரில் வெளியிடப் பெறுகிறது. The Magic Shepherd என்ற பாட்டு முன்னொரு முறை Dasavathara Gopal என்ற தலைப்போடு பிரசுரிக்கப்பட்டுள்ளது.

## தமிழ்ப் பாக்கள்

**ஸ்ரீவிஜயரகுநாததுரைராஜ் அவர்கள் மெய்க்கீர்த்தி**—காலஞ்சென்ற புதுக்கோட்டை அரசரான ஸ்ரீமார்த்தாண்ட பைரவத் தொண்டைமான் பகதூர், அயல் நாடுகளில் வாசம் செய்தபொழுது, புதுக்கோட்டையில் அரசப் பிரதிநிதியா (Regent Saheb) யிருந்து ராஜ்யம் நடத்தியவர்கள் ஸ்ரீவிஜயரகுநாததுரைராஜ் அவர்கள். அவர்கள் அழைப்பின்மேல் 1923-ம் வருஷத்தில், புதுக்கோட்டைக்குத் தசரா உற்சவத்திற்குச் சென்றிருந்தபொழுது ராஜ சமுகத்தில் பாடப்பட்டது. பண்டைத் தொண்டை மன்னர் பெருமை, புதுக்கோட்டை அரசர்கள், திருநெல்வேலித் தொண்டைமான்களின் பூர்வோத்தரம் முதலியன விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது. இதை அடிப்படையாகக்கொண்டு, “தொண்டைமான் குல சரித்திரம்” என்றொரு நூல் வெளியிட ஆசிரியர் எண்ணியிருந்தார்கள்.

**எக்காளம், ராஜ ராம் மோகன்ரா் வாழ்த்து, முதல் மனைவி இறந்தபோது பாடிய இரங்கற் பாக்கள்** — முதலியன பல வருடங்களுக்குமுன் பாடப்பட்டனவேனும் இப்பொழுதுதான் முதன் முறை வெளியிடப்படுகின்றன.

திருவொற்றியூர் தியாகேசர் காதல், நெல்லை நாயகர் துறம், அருள் கடன் விண்ணப்பம், ஆட்கொண்ட பதிகம்—என்ற தலைப்புக்களின் கீழ் பல பாக்கள் பாடப்பட்டுள்ளன. அவற்றுள் சில பாக்களே இன் நினைவு மலரில் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

தனிநிலைக் கவிகள்–(Sonnets)—கடவுள், மனிதன், உலகம் இவை களைப்பற்றி ஆசிரியர் தம்முடைய கருத்துக்களை எடுத்துக்கூற எழுதப்பட்டவை. சுமார் 25 கவிகள் வரை எழுத அடி கோலி 7-பாட்டுக்களே முற்றுப்பெற்றிருக்கின்றன.

பகவத்கீதை அகவல் — பகவத்கீதை முழுவதையும் அகவலால் பாட எண்ணி, நான்கு அத்தியாயங்கள் (ஞான யோகம் வரை) பாடப்பட்டிருக்கின்றன. அவற்றில் 3-வது அத்தியாயமான கர்ம யோகப் பகுதி இந்நினைவு மலரில் வெளியிடப்படுகிறது. மற்றப் பகுதிகளும் விரைவில் வெளியிடப்படும்.

பிரமமுக்தம் — இது நூறு பாட்டுக்களடங்கிய ஒரு சிறு நூல். ஆசிரியரால் தம் 50-ம் வயதிற்குமேல் எழுதப்பட்டது. அவர்கள் எழுதிய கடைசி நூல். இதில், தம் ஆராய்ச்சி அனுபவத்தால் அறிந்த சமய உண்மைகளை வெளியிட்டிருக்கிறார்கள். விரிவஞ்சி, அந்நூலின் முதல் பன்னிரண்டு பாட்டுக்களே வெளியிடப்படுகின்றன. கூடிய சிக்கிரம் இதை ஒரு தனி நூலாக வெளியிட முயல்வேன்.

## தமிழ் வசனம்

தியானச் சிந்தனைகள் — ஆசிரியர் 1922-ம் வருஷம் 33 சிந்தனைகள் எழுதி உதவினார்கள். அவற்றை நான் அப்போது தனிப்

புத்தகமாக வெளியிட்டேன். அன்பர்கள் பெரிதும் போற்றினர் கள். அவற்றில் மூன்று சிந்தனைகளே நினைவுமலரில் இடம் பெறுகின்றன.

இந்தியச் சிற்பம் — ஆசிரியர் எழுதிய தமிழ் வியாசங்கள் பல வுண்டு: உண்மை, இயலானந்தம், மூந்நிற உட்கிடை, எம் மதமும் சம்மதமே, இந்தியச் சிற்பம் முதலியன. அவர்கள் வாழ்நாள் முழுவதும் சித்திர ஆசிரியராகக் காலங்கழித்தவர்கள். அவர்கள் இந்தியச் சிற்பத்தைக் கொண்டுள்ள கருத்துக்கள் சித்திரிகருக்குப் பயன்படுமெனக் கருதி, இவ்வியாசம் மட்டும் இந் நினைவுமலரில் வெளியிடப்பெறுகிறது.

——